உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.



"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி கக.] ரௌத்திரி-ஹு மாசி-மீ [பகுதி ச.

Vol. XIX. February—March—1921. No. 4.

உள்ளுறை.



பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா-8.

வெளிநாடுகளுக்கு ரூ. 1—8—0.

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி ௧௯.] ரௌத்திரி-ஹு மாசி-மீ [பகுதி ௪.
Vol. XIX. February—March—1921. No. 4.

## ஓரொருதலைமுடிவின் மறுதலைமுடிவு.

சென்ற செந்தமிழ்ப்பகுதிகளில் நெடிதாக வெளிவந்துகொண்டிருந்த "13-ம் புறப்பாட்டும் அதனுரையும்" என்ற ஆராய்ச்சி கழிந்த மார்கழிமாதப் பகுதியோடு முடிவடைந்திருக்கிறது. அதிற்கூறிய விடயங்கள் பலவும் எவ்வாறிருப்பினு மிருக்க; முடிவுபையுட் கூறியவற்றைமட்டும் சுருக்கமா யிங்காராய்வோம்.

அம்முடிவுரையி னகவாய்முடிவில், (அப்புறப்பாட்டினுள்) நாடுகிழவோன் எனச் சோழனே குறிக்கப்படுகிறுன் என முடிவு கூறப்பட்டிருக்கிறது.

அவ்வாறு குறிப்பதற்கேற்ற பிறகுறிப்பு ஒன்றேனும் அப்பாட்டினுள்ளாயினும், உரையினுள்ளாயினும், ஆராய்ச்சியுள்ளாயினும் காட்டப்படவில்லை.

நாடுகிழவோன் என்ற பெயர், ஆற்றலாலும் அதன் அடைமொழிகளாலும் பொதுவாக ஓரரசனை யுணர்த்திநிற்பதல்லது சேரபாண்டியர் முதலிய பிறவரசரை விலக்கிச் சோழனொருவனையே சிறப்பாகக் குறிக்குந் திறனுடையதன்று.

அது, சோழனொருவனையே குறித்துணர்த்தவேண்டுமாயின்,

"குறித்தோன்கூற்றம் தெரித்துமொழிகிளவி"

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால்,

"ஒரு பொருள்வேறுபாடு குறித்தோன் அஃ தாற்றல்முதலாயின வற்றால் விளங்காதாயின் அதனைத் தெரித்துச் சொல்லுக"

என்று விதிக்கப்பட்டிருக்கிற கட்டளைக்குட்பட்டுச் சோழனுக்கே யுரிய சிறப்படையால் தெரித்துணர்த்தியிருக்கவேண்டும். (அதாவது "விழுமிய நீர்நாடு கிழமை யோனே" என விசேடிக்கப்பட்டிருக்கவேண்டு மென்பதாம்)

இங்கு "நீர்நாடு" என்னும் அடைமொழித்தொடர், தன்னைத் தேடிப்பிடிக்கவேண்டாது தொடையழகுடையதாகச் சோழனை விசேடிக்கும்படி திருந்துமொழிப் புலவரது சிந்தையினும் வாக்கினும் தெரிநிலையாய் நிற்கவும் அவற்றைச் சேரவிடாது இடையே வெளியையிட்டு விலக்கி நீர்வெளிநாடென வேறுபொருள்குறிக்க விசேடித்தமையால் அவர்க்கு அச்சொல்லாற் சோழனையுணர்த்துங் கருத்தில்லை என்பதே துணியத்தக்கதாயிருக்கிறது.

* * *

இனி அம்முடிவுரையின் புறவாயில்.— "(1) மகோததி (பெருங்கடல்) இந்தியாவின் குணபாலுள்ள கடலுக்குப் பிற்காலத்தார் வழங்கின பெயர்" என்றும், "சங்கத்தான்றோர் இப்பெயர்வழக்கினை யறிந்தார்களெனற்கு லக்ஷியமில்லை" யென்றும் முடிவுகள் கூறப்பட்டுள்ளன.

இங்கு, குணபாலுள்ளகடலை அவ்வாறு கூறுதலால் முடிவுரையுடையார்க் கொருபயனுமின்மையால் அது குடபாலுள்ளகடலென்னும் கருத்துடன் தவறியெழுதப்பட்டிருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது. குடபாலுள்ளகடலைப்பற்றிக் கூறியதாகவே வைத்துக்கொண்டு விவகரிப்போம்.

சங்கத்தான்றோர்கள் தமிழ் மண்டலத்தின் குடபாலுள்ளகடலை இயற்கையாயமைந்த பெருங்கடலென்றும், குணபாலுள்ளகடலை செயற்கையானமைந்த சிறுகடலென்றும் பகுத்தறிந்து வழங்கிவந்திருக்கின்றார்களென்பதற்கு இலக்கிய மில்லாமற்போகவில்லை. குமரியாறு கடல் கொள்ளுமுன்பிருந்த பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார்பாடிய ௬-ம் புறப்பாட்டில்,—

"குணஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்"

என்ற இரண்டடிக ளுள்ளன. இவற்றின் உரையும் பின்வருமாறு.—

"கீழ்கண்ணது கரையைப் பொருகின்ற சகரரால் வெட்டப்பட்ட சாகரத்தின் கிழக்கும், மேல்கண்ணது பழைதாய் முதிர்ந்த கடலின் மேற்கும்" என எழுதப்பட்டிருக்கிறது. இங்கு மேல்கடலைப் பழைதாய் முதிர்ந்தபௌவமென்றும், கீழ்கடலைச் சகரரால் வெட்டப்பட்ட தொடுகடலென்றும் சொல்லியிருத்தலால், தமிழ்மண்டலத்தின் கீழ்பாலுள்ள கடல் உலகுதோன்றிய பல்லாயிரம்யாண்டுகளுக்குப்பின் தரையினைருபுடை சகரராற்றோண்டப்பட்ட சிறுகடலென்றும், மேல்பாலுள்ளது உலகு தோன்றுமுன்னமே அது தோன்றுதற்கிடமாயிருந்த மிகப்பழமை வாய்ந்த பெருங்கடலென்றும் சங்கப்புலவர்கள் நன்கறிந்து வழங்கிவந் தனரென அறியலாம். ஆதலால் விழுநீர்வேலிநாடென்பதற்குப் பெருங் கடலை வேலியாகவுடைய சேரநாடெனப் பொருள்கொள்வது பிழை யாகாது.

* * *

இனி, "(2) 'அண்மைச்சொல்லே யியற்கையாகும்' என்ற தொல் காப்பியச்சூத்திரம் நான்கு உயிரீற்றுச் சொற்களுக்குமட்டுமே ஏற்புடைய விதி" என்று ஒரு முடிவு கூறப்பட்டிருக்கிறது.

அண்மைச்சொல் என்றது அணியாரைவிளிக்கும் சொல் என்ற பொருளுடையதாதலால் அது அவ்விளியேற்கு மெல்லாவீற்றுச் சொற் களையும் பொதுப்படவுணர்த்துமென்பது சொல்லாற்றலானும் பொருந்து மாற்றானு மறியலாம். இக்கருத்து ஆசிரியர்க்கில்லையாயின் விளியேலாப் பெயர்களை விலக்கியதுபோல மெய்யீற்றண்மைச்சொற்களையும் விதந் தோதி விலக்கியிருக்கவேண்டும். (அதாவது "மெய்யீறண்மை விளி யேலாவாம்" என விலக்கவேண்டு மென்பதாம்) அவ்வாறு விலக்காதிருப் பதும் ஆசிரியர்க் கொரு தவறாம்.

இஃதன்றியும், உயிரீற்றண்மைவிளி யுதாரணவகைகளையும், மெய் யீற்றண்மைவிளி யுதாரணவகைகளையும் எண்ணி அளவிடுவோமாயின், உயிரீற்றுதாரணவகைகளைக்காட்டிலும் மெய்யீற்றுதாரணவகைகளே

மிகப் பலவாகுமென அறியலாம். சிறுபகுதியான உயிர்த்தன்மைவிளிக்குத் தனியே ஒரு சூத்திரம் வகுத்த ஆசிரியர், பெரும்பகுதியான மெய்யீற்றன்மைவிளிக்கும் அவ்வாறு தனியே ஒரு சூத்திரம் வகுக்க அறியாது மறந்துபோயினரென்பதும் அவர்க்கொரு தவறாகும்.

அன்றியும், "ஏனைப்புள்ளி" என்னும் சூத்திரத்திற் பெரும்பகுதியான மெய்யீற்றன்மைவிளிகளையெல்லாம் அமைத்துக்கொண்டனரெனக் கொள்வோமாயின், அவ்வாறே "ஏனையுயிரே" என்ற சூத்திரத்துட் சிறுபான்மையான உயிரீற்றன்மைவிளிகளையு மமைத்துக்கொள்ள வறியாது, அவற்றிற்குத் தனியே ஒரு சூத்திரம் வகுத்துவைத்திருப்பதும் முறைபடக்கூறாது பிழைபடக்கூறலென்னுங் குற்றமாம்.

இன்னோரன்ன பலகுற்றங்களைத் தொல்காப்பியர்மேலேற்றிக் கொண்டு, பேராசிரியர் பிழைபடக்கூறினர், அடியார்க்குநல்லார் அறியாது கூறினர் என்று உரையாசிரியர்களையும் குறைகூறும் கருத்தோடுகூடி, நாம் கூறுவதே உண்மைப்பொருளென நாட்டமுயலுவதைக்காட்டிலும் கல்வி கேள்விகளாற்சிறந்து பேரறிவாலுநிறைந்த அந்நூலாசிரியருரையாசிரியர்வாக்கியங்களுக்கும் தமிழிலக்கியங்களுக்கு மிணங்க நம்முடைய கருத்தைத் திருத்திக்கொள்ளுதலே நலமென்று தோன்றுகிறது.

* * *

இனி, "(3) சங்கநூல் வழக்கின்கண்ணே ஏகாரமடுத்த ஒனீற்றுச் சொற்கள் யாண்டும் படர்க்கையாகவே வந்துள்ளனவென ஒரு முடிவு கூறப்பட்டிருக்கிறது. இதனால் 13-ம் புறப்பாட்டிறுதிச்சொல்லும் அவ்வாறேயாகுமெனக் கருதுவதாகத்தெரிகிறது.

இது, இக்காலத்திலகப்படாதனவும் இறந்தொழிந்தனவுமான சங்கநூல்களெல்லாவற்றையும் ஒரு சிறிதும் குறையின்றி யாராய்ந்தறிந்து கொண்டாலன்றி நம்பற்பாலதன்று.

அன்றியும், ஒவ்வொருசொல்லும் சங்கநூல்களில்வந்தபடியே வரவேண்டுமென்று எந்நூலி லெழுதப்பட்டிருக்கிறது? அப்படி ஒருவிதியிருக்குமாயின் அது தன்னைப்பற்றுதல், ஒன்றனைபோன்று பற்றுதலென்னுங் குற்றங்களையுடையதாகும். ஆதலால், தொல்காப்பிய முதலிய

இலக்கணத்தால் அமைக்கப்பட்ட சொற்களுள் எது எவ்விடத்தில் எப்படியிருந்தாற் பொருட்பொருத்தமுடையதாயிருக்குமோ அது அவ்விடத்தில் அப்படியேயிருக்கலாமென் றறியத்தக்கதாயிருக்கிறது.

* * *

இனி, "(4) 'இவன் யார்' என்ற வாய்பாட்டிலுள்ள வினாக்களுக்குப் பெயரேயல்லது வினை விடையாதலில்லையென்று ஒருமுடிவு திடமாயுரைக்கப்பட்டிருக்கிறது.

அவ்வாய்பாட்டிலுள்ள 'யார்' என்னும் சொல் 'வினாவினைச்சொல்' எனத் தொல்காப்பிய முதலிய இலக்கணநூல்களால் நன்குதெரிவிக்கப்பட்டிருக்கிறது. பெயர்வினாக்களுக்குப் பெயர்விடையும், வினைவினாக்களுக்கு வினைவிடையும் வருவது மரபு; இதற்கு மாறாகப் பெயர்வினாவுக்கு வினைவிடையும், வினைவினாவுக்குப் பெயர்விடையும் வருமாயின் அது விடைவழுவாம்,

"செப்பும்வினாவும்வழாஅலோம்பல்"

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் வினாவும் விடையு மாறுபடலாகாதென விதிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விதிக்கு மேற்கூறியமுடிபு முற்றும் விரோதமாயிருக்கிறது.

இனி வழக்கின்கண், வினாப்பெயர்களுள் சாத்தனோ? கொற்றனோ? உழுகிறான்? என வினவியவழி (இவ்வினாப்பெயருக்கு) சாத்தன் அல்லது கொற்றன் என்ற பெயரே விடையாய்வருவதல்லது வினை விடையாக வருதலில்லை.

வினாவினையுள், சாத்தன் உண்கிறானோ? உறங்குகிறானோ? என வினவியவழி (இவ்வினாவினைக்கு) உண்கிறான், அல்லது உறங்குகிறான் என வினையே விடையாகவருவதல்லது பெயர் விடையாக வருதலில்லை.

இனி, குறிப்புவினையுள் கொற்றன் நல்லனோ? தீயனோ? என வினவியவழி நல்லன் அல்லது தீயன் என விடையிறுக்கக் காண்கிறோம். இங்கு நல்லன், (அல்லது) தீயன் என்ற விடைமொழிகள் பெயர்ச்சொற்கள்போலத் தோன்றுமாயினும் அவை வினவினோன்கருத்துணர்ந்து விடையிறுத்தோன்கருத்தால் நோக்கில், குறிப்புவினைப்பொருளுணர்த்தும் வினைச்சொற்களென்றே தெளியத்தகும். இங்கு, நல்லன் என்னும்

வினைக்குறிப்புக்கு நல்லொழுக்கமுடையனாயிருக்கிறான், நன்னெறியிலொழுகுகின்றான் என அக்குறிப்பை வெளிப்படுத்தும் பரியாயமாகிய தெரிநிலைவினையும் விடையாக வருதலால் அது பெயர்ச்சொல்லில்லையென்றும் வினைச்சொல்லே யாமென்றும் அறியத்தக்கது.

இவ்வாறே, பயறிருக்கிறதா? வென்று வினவியவழி இத்தெரிநிலை வினாவினைக்குப் பயறிலதாயின் இல்லை என்ற குறிப்புவினை விடையும், பயறில்லையா? என்று வினவியவழி (உளதாயின்) பயறிருக்கிறது என்ற தெரிநிலைவினையும் பரியாய விடையாகவருதலும் தவறில்லையென்று தெரிகின்றோம். (இவை புறநிலைவினா)

இனி அகநிலைவினாவுள் யாவன் வருகிறான் என்ற வினாப்பெயர்க்குக் கொற்றன் வருகிறான் எனப் பெயரே விடையாகவருகிறது: வினை விடையாதலின்று. அதுபோல இவன் யார் என்ற அகநிலை வினா வினைக்கு வினையே விடையாகவேண்டுமென்பது தெளியத்தக்கது. அவ் வினை தெரிநிலைவினையாகவேனும், குறிப்புவினையாகவேனு மிருக்கலாமென முன்கூறியவாற்றா லறியலாம்

இலக்கணமும் வழக்கு மிப்படியிருக்கவும், "இவன்யார்" என்னும் 13-ம் புறப்பாட்டின் வினாவினைக்குத் 'தீதிலனாகிப்பெயர்க' என்னும் தெரிநிலைவினை விடையாகமாட்டாதென்றும், நாடுகிழவோன் என்ற பெயரே விடையாகவேண்டுமென்றும் சிலர் கருதுகிறார்கள். இக்கருத்துக்கு யாதோ ராதரவும் காணப்படவில்லை.

ஆனால் "இவன்யார்" என்ற வாய்பாட்டிற்கெல்லாம் யாண்டும் பெயரே விடையாய்வந்திருப்பதாக ஒருதலை ஆராய்ச்சியுள் மேற்கோள் காட்டப்பட்டன. அவையெல்லாம் பெயர்போலத் தோன்றும் குறிப்பு வினைச் சொற்களென்பதைப் பின்வரும் விளக்கத்தா லறியலாம்.

'இவன்யார்' என்னும் வினாவினைக்குறிப்புக்கு, இவன் என்னுடையன்? என்பதே பொருளாகும். ஆகவே இங்கு உடைமையாகிய வினையே வினவப்படுவதாயிருக்கிறது. வினைக்குறிப்பாவது வினைமுதற்குரிய வினை, சினை, பண்பு, உடைமை, சாதி, பெயர், முறை, இயைபு முதலியவற்றுள் ஏதேனுமொன்றை யுடைமையே வினையாகி, காலங்காட்டு முறைப்பின்றிப் பெயரோடு வேற்றுமைதோன்றாது பயனிலையாக வழங்கப்படுவது.

ஒருவனைச்சுட்டி இவன்யார்? என வினவியவழிப் பொன்னன் என விடை வரலாம்; இது, என்னுடையன்? என்ற வினவினைக்குறிப்புக்கு விடையானமையால், பொன்னுடையன் என்ற குறிப்புவினை விடையாயிற்று. இது பெயர்விடை யாகாது.

இதுதானே, இவன் யாவன்? என்ற பெயர்வினவுக்கு விடையாக வரின், குறிப்புவினையாகாது; பெயர்விடையாம்.

இவ்வாறே இவன்யார்? என்றவழிச் சாத்தன் என விடைவரின் அது, சாத்தனுயுள்ளோன் என்ற குறிப்புவினைவிடையாகவும் 'இவன் யாவன்' என்ற வழிச் சாத்தன் என விடைவரின் அது சாத்தன் என்ற பெயர்விடையாகவும் பகுத்தறியற்பாலது. இவ்வாறே முறைப்பெயர் முதலிய பிறபெயர்களும் குறிப்புவினையும், பெயருமாகி நிற்கும் நிலை வேறுபாடுகளை இடம்நோக்கி யறிந்துகொள்க.

இனி, இவன்யார் என வினவியவழி உழுவான், அல்லது ஊருக்குப்போவான் எனத் தெரிநிலைவினை விடையாதல் கூடுமோ என்ற சந்தேகம் சிலர்க்கு உண்டாகலாம். ஒவ்வொரு வினவிற்கும் வினவினோன் கருத்துணர்ந்தே விடையிறுக்கவேண்டும்.

இவன் என்செய்வான் என்னும் கருத்துடன் இவன் யார் என வினவியவழி, வினவப்பட்டானிடத்து நிகழும் தொழில்பற்றி உழுவான், அல்லது ஊர்க்குப்போவான் எனத் தெரிநிலைவினையால் விடையிறுப்பின் அது தவறாகாது. அக்கருத்தின்றி, உனக்கு இவன் 'என்ன முறையுடையன்' என்னும் கருத்தால் இவன்யார்? என வினவியவிடத்தும் உழுவான் அல்லது ஊருக்குப்போவான் என விடையிறுப்பின் விடை வழுவாம்; மாமன் என விடையிறுப்பின் வழுவன்றென்றுணர்க. அது இங்கு மாமனுயுள்ளோன் என்ற குறிப்புவினையாய் நிற்கும். இவன் யாவன் என்று வினவியவழி மாமன் என்பது பெயர்விடையாம். இங்கு மாமன் என்ற ஒருசொல்லே ஓரிடத்துக் குறிப்புவினையாகவும், பிறிதோரிடத்துப் பெயர்ச்சொல்லாகவும் கொள்ளுதற்கண்ணுள்ள பொருள் வேறுபாட்டினைக் குறிப்புவினைக்கும், பெயர்ப்பயனிலைக்குமுள்ள பொருள்வேறுபாட்டின் நுண்ணுணர்வுடையோர்வாய்க் கேட்பின், தெள்ளிதினுணரலாகும்.

இனி 'இவன் யார்' என்ற வினவினைக் குறிப்புக்கு இவன் என் செய்வான் என்ற பொருளுண்டோ? என்ற சந்தேக முண்டாகலாம். இங்கு, 'என் செய்வான்' என்ற தெரிநிலைவினை என்செயலுடையான் என்ற குறிப்புவினையின் வெளிப்படையான வினவினையாகிய ஒருபொருளுடைய பரியாயச்சொல்லாதலால் அதுவும் யார் என்னும் வினவினைக்குறிப்புக்குப் பொருளாகத் தடையில்லை. இதனை,

"ஊதைகூட்டுண்ணும்உகுபனியாமத்தென்
கோதைகூட்டுண்ணியதான்'யார்'மன்—போதெல்லாம்
தாதொடுதாழுந்தார்க்கச்சிவளநாடன்
தூதொடுவாராதவண்டு"

என்ற சான்றோர்வாக்கினுள், தூதொடுவாராதவண்டு எம் கோதை கூட்டுண்ணிய யார்? என உயர்திணைவாய்பாட்டால்வந்த வினவினைக் குறிப்புச்சொல், தூதொடுவாராதவண்டு எம்கோதை கூட்டுண்ணுதற்கு 'ஏன் வருகிறது? என்ற தெரிநிலைவினவினைப்பொருளுடையதாயிருத்தலானும், அதன் குறிப்பாகிய வாரற்கவென்னும் தெரிநிலைவினைவிடையைப் பயனிலையாகக்கொண்டு முடிதலானும் கண்டுகொள்க. இங்கு வண்டு வினவப்படாது, அவ்வண்டின் வருகையே வினவப்படுவதுபோல "இவன்யார்" என்ற புறப்பாட்டுவினவினைக்குறிப்பாலும் சோழன் வினவப்படாமற் சோழனது வருகையே வினவப்படுதலால் இவன் 'ஏன் வருகிறான்' என்பதே வினப்பொருளாகவும், களிறு மதம்பட்டமையால் வழிதவறிவருகிறான்; தீதின்றிப் பெயரக்கடவன்; என்பன விடையாகவும் கொள்ளத் தடையில்லை.

இங்குக் கூறியவாற்றால் 'இவன் யார்' என்னும் வாய்பாட்டினுள்ள 'யார்' என்னும் வினவினைக்குறிப்புக்கு 'என்னுடையன்' என்பதே பொதுவானபொருள் என்றும் அவ்வுடைமையாகிய வினையே வினவப்படுவதென்றும், உடையோன் வினவப்படுவோ னல்லனென்றும், அவ்வுடைமையுள் வினையும் ஒன்றென்றும், அவ்வினவினைக்கு வினையே விடையாகவேண்டுமென்றும், பெயர் விடையாகமாட்டாதென்றும் காட்டப்பட்டன.

திரு. நாராயணையங்கார்.

———— செந்தமிழ்ப்பத்திராதிபர்,

# தொல்காப்பியரது சமயம். II.

சென்ற ஆடிமாதப்பத்திரிகையில், தவவொழுக்கம் என்று பொருள்கொள்ளப்பட்ட 'படிமை' யென்னுஞ்சொல்லை யாராய்ந்து தொல்காப்பியர் ஜைனராதல்வேண்டுமெனத் துணிந்தேன். யான் எழுதினவற்றை மறுத்து ஸ்ரீமத்- நவநீதகிருஷ்ணபாரதியவர்களும் பத்திராசிரியரவர்களும் இரண்டு கண்டனவுரை யெழுதியுள்ளார்கள். அவைகளைக்குறித்து யான் கூறவேண்டுவனவற்றைப் பின்னர் எழுதுவேன். தொல்காப்பியர் ஜைனராவரென்பதற்கு அவரது நூலின்கண்ணேயே சான்றுகள் உளவென்று எனது உரையின் முடிவிற் சுட்டியிருந்தேன். அச்சான்றுகளில் ஒன்றை இப்பொழுது விவரிக்க எண்ணுகிறேன்.

இந்தியாவிலுள்ள ஒவ்வொரு சமயமும் தனக்கே சிறப்பாகவுரிய சில மூலதத்துவங்களை வித்தாகக்கொண்டு முளைத்தெழுந்து தழைத்து நிற்கின்றது. ஒவ்வொரு சமயமும் அதற்குரிய தத்துவங்களை அதன் கொள்கைகளுக்கும் ஆசாரங்களுக்குந் தக்கபடி பாகுபாடுசெய்து வரையறுத்துக்கொள்ளும். ஒரு சில தத்துவங்கள் இரண்டுமூன்று சமயங்களுக்குப் பொதுவாயினு மாகலாம். ஆனால் அவற்றின் உட்பாகுபாடுகள் அங்ஙனம் பொதுவாயிருத்தல் அரிது.

ஜைனர்கள் தமது சமயநூல் ஒப்புக்கொண்ட தத்துவங்களை இரண்டுமுதற் பலவாகப் பிரித்துக்கொள்வார்கள். மிக விரித்துப் பாகுபாடுசெய்யுங்கால், தத்துவங்களைப் பத்து என அறுதியிடுவர். அவை யாவன:—

"தந்தநூற்பொருள் தன்மாத்திகாயமு
மதன்மாத்திகாயமுங்காலாகாயமுந்
தீதில்சீவனும்பரமாணுக்களு
நல்வினையுந்தீவினையுமவ்வினையாற்
செய்வுறுபந்தமும்வீடுமித்திறத்த"

—மணிமேகலை XXVII(172-6.)

மிகச்சுருங்கவுரைக்குமிடத்து இவையெல்லாம் 'ஜீவன்' 'அஜீவன்' என்ற இரண்டனுள் அடங்கும். "அத்ர ஸம்க்ஷேபத: தாவத் ஜீவாஜீவாக்யே த்வே தத்வேஸ்த:" என்று ஸர்வதரிசனஸங்கிரகம் கூறுகின்றது.

இவ்வாறாகவுள்ள தத்துவங்களில் ஜீவன், 'ஸ்தாவரம்' 'திரசம்' என இருவகைப்படும். ஸ்தாவரம் = நிலைத்திணைப்பொருள்; திரசம் = இயங்குதிணைப்பொருள். ஸ்தாவரங்கள் ஐவகைப்படும்: பிருதிவிகாயன், அப்புகாயன், தேயுகாயன், வாயுகாயன், வனஸ்பதியென. வனஸ்பதியென்றது மரம், புல்லென்பனவற்றை. இந்த ஐவகைஸ்தாவரங்களும் ஓரறிவுயிர்களாம்: அஃதாவது இவை பரிசனேந்திரியமட்டுமுடையன. 'ஸ்தாவரா: ஸ்பர்சனைகேந்த்ரியாஸ்ஸு' என்பது ஸர்வதரிசன ஸங்கிரகம்.

திரசம் ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர் எனப் பகுக்கப்படுகின்றது. ஸ்பரிசம் ரஸம் என்ற இரண்டினையுமறிவன ஈரறிவுயிர்: அவை சங்கு முதலியன. ஸ்பரிசம், ரஸம், கந்தம் என்ற மூன்றினையும் அறிவன மூவறிவுயிர்; அவை எறும்பு முதலியன. ஸ்பரிசம் ரஸம் கந்தம், ரூபமென்ற நான்கினையும் அறிவன நாலறிவுயிர்; அவை வண்டுமுதலியன. ஸ்பரிசம், ரஸம், கந்தம், ரூபம், சப்தம் என்ற ஐந்தினையும் அறிவன ஐயறிவுயிர்; அவை விலங்கு முதலியன. இவற்றையெல்லாம் மேருமந்தரபுராணம் தெளிவாய்க் கூறுகிறது:—

"ஒன்றிரண்டொருமூன்றுநாலைந்தாய்
நின்றவைம்பொறிநெறியின்வாழுயிர்
ஒன்றுநீர்மரம்நிலம்நெருப்புக்காற்று
என்றிக்காயம்ஐந்தெய்திவாழுமே"

"உந்துசிப்பிசங்காதிநாவன;
குந்தெறும்புகோபாதிமூன்றன;
அந்துதும்பிவண்டாதிநால; ஐந்து
இந்தியம்பசுநரகர்தேவர்"

—(வச்சிராயுதனுத்தரம். 10, 11)

கடைசியாய் கூறப்பட்ட ஐயறிவுயிர் ஒரு சாராரது கருத்துப்படி இருவகைப்படும்: மனமில்லன (அஸம்ஜ்ஞி) மனமுள்ளன (ஸம்ஜ்ஞி)

என. விலங்கும் ஒருசார் மக்களும், அஸம்க்ஞிபாம். மக்கள் தேவர் நரகரென்றித்திறத்தினர் ஸம்க்ஞிபாம். இங்ஙனம் 'The Heart of Jainism' என்ற நூல் தெரிவிக்கின்றது.

இதுவரை கூறிய பாகுபாடுகளனைத்தையும் அடியிற்காட்டியிருக்கிறேன்.




இங்ஙனம் உயிர்வகைகளைப் பகுத்துணர்ந்துகோடல் ஜைன சமய ஆசாரத்துக்கு மிக அத்தியாவசியகமாவதாம். கொல்லாவிரதத்தினை இச்சமயத்தினர் பிறவறங்களெல்லாவற்றிலும் மிக மேலாக மதித்துள்ளார். ஜைனதுறவிகளுக்கு விதிக்கப்பட்டுள்ள ஆசாரங்களை நோக்கினால் இதனுண்மை நன்கு புலப்படும். தாம் நடக்கும்போது தமது கால்பட்டு எறும்பு முதலிய சிற்றுயிர்கள் அழிதல் கூடாதென்று கருதி மயிற்பீலியாற்பூமியிலுள்ளனவற்றை மெல்லெனவொதுக்கிச் செல்லுங் கடப்பாட்டினர் இத்துறவிகள்; குளிர்ந்த சுத்த ஜலத்தில் உயிரிருப்பதாக எண்ணி அதனை உட்கொள்ளார்; பேசும்போது காற்றிலுள்ள சிற்றுயிர்கள் வாயிற்பட் டழியுமென்றஞ்சி வாய்மூடியிட்டுக்கொள்வர். பலபடச்சொல்லியென்? இவர்களது இறைவராகிய அருகக்கடவுள்தாமும் இக்கொல்லாவிரதம் அநுஷ்டிப்பாராகக் கருதப்படுகின்றார். 'கேள்வியினுங்-கொல்லாவதத்தெங்கள்கொற்றவன்'என்பர் அவிரோதியாழ்வார்;(திருநூற்றந்தாதி- 42)இவ்விரதத்திற் சிறிதும் வழுவாதிருக்கவேண்டுமாயின், எவையெல்லாம் உயிரென்று சொல்லற்குரியனவென்பது நன்கு அறியப்

படுதல்வேண்டும். ஜீவாஜீவபேதங்களைத் துறவியானவன் உணர்ந்து கொள்ளவேண்டுவது ஆவசியகமென உத்தராத்யயனம் கூறுகின்றது. (Sacred Books of the East-Vol. XLV-p. 206). இவ்வாறாக, உயிர்வகைகளை யாராய்தல் ஜிநதர்மத்தின் ஓர் ஆவசிகநோக்கமாய் முடிந்தது. இதற்கிணங்கவே 'உலகுபுகழ்பெருந்துறவியும் கேவலஞானப் பெருஞ்செல்வருமாகிய மகாவீரர் ஐம்பெருவிரதங்கள், அவற்றின் உட்பாகுபாடுகள், அறுவகையுயிர்கள்–இவைகளைக்குறித்து ஶ்ரமணர்களுக்கும் நிக்கந்தர்களுக்கும், கௌதமர் முதலாயினார்க்கும் உபதேசித்தருளினார்' என்று ஆசாராங்க சூத்திரம் கூறுகின்றது (Sacred Books of the East. Vol. XXII. p. 202.) திருநூற்றந்தாதியினும் "ஜீவனுள்ளிட்டத்திவைத்தாறுள்ளவாறறைந்தாய்" என்று காணப்படுகின்றது. ஈண்டெழுதியவற்றால் இவ்வகையுயிர்ப்பாகுபாடு ஜிநதர்மமொன்றற்கே பூர்வத்தில் உரியதாயிருந்தமை தெளியலாகும். பிற சமயத்திற்குரிய பொருட்பாகுபாட்டில் இது காணப்படாமை ஸர்வதரிசன ஸங்கிரகம் நோக்கி அறிந்துகொள்க. தொல்காப்பியர் தமது பெருநூலின் கண்ணே பின்வருமாறு கூறுகின்றார்:–

"ஒன்றறிவதுவேஉற்றறிவதுவே
இரண்டறிவதுவேஅதனொடுநாவே
மூன்றறிவதுவேஅவற்றொடுமூக்கே
நான்கறிவதுவேஅவற்றொடுகண்ணே
ஐந்தறிவதுவேஅவற்றொடுசெவியே
ஆறறிவதுவேஅவற்றொடுமனனே
நேரிதினுணர்ந்தோர்நெறிப்படுத்தினரே"

–மரபியல்–27.

'புல்லுமரனுமோரறிவினவே
பிறவுமுளவேஅக்கிளைப்பிறப்பே' (–28)

'நந்துமுரளுமீரறிவினவே
பிறவுமுளவேஅக்கிளைப்பிறப்பே' (–29)

'சிதலுமெறும்புமூவறிவினவே
பிறவுமுளவேஅக்கிளைப்பிறப்பே' (–30)

'நண்டுந்தும்பியுநான்கறிவினவே
பிறவுமுளவே அக்கிளைப்பிறப்பே' (–31)

'மாவுமாக்களுமையறிவினவே
பிறவுமுளவே அக்கிளைப்பிறப்பே' (–32)

'மக்கள்தாமேஆறறிவுயிரே
பிறவுமுளவே அக்கிளைப்பிறப்பே' (–33)

இங்கே காட்டப்பட்ட சூத்திரங்களின்பொருள் ஜைனசமயக்கொள்கை யோடு முற்றும்பொருந்துவது காணலாம். மக்களை ஆறறிவுயிர் என்பது அந்தச் சமயத்தினருள் ஒரு சாரா ரது கொள்கையாதலின் அது பெரு வரவிற்றாய்க் காணப்படுதலில்லை. தொல்காப்பியர் தாமாகவே இப் பாகு பாட்டினை அமைத்துக்கொண்டாரெனக்கூறுதலுந் தகாது; ஏனெனில், இவ்வுயிர்வகையை 'நேரிதினுணர்ந்தோர்நெறிப்படுத்தினரே' என அவரே யெடுத்துமொழிகின்றார். ஜைனசமயமன்றிப் பிறசமயங்கட்குரிய பொருட்பாகுபாடுகளில் ஒன்றின்கண்ணும் இவ்வுயிர்வகை தரப்படவில் லையென்பது மேலே கூறினேன். ஆகவே ஜைனசமயத்திற்குரிய தத்துவ வுட்பாகுபாட்டினையெடுத்துத் தொல்காப்பியர் ஆளுதலினாலே, அவர் ஜைனராதல்வேண்டும் என்னுந் துணிபு உறுதியடைகின்றது.

S. வையாபுரிப்பிள்ளை,

திருவனந்தபுரம்.

---

* இவர் (பவணந்தி) சைனமதத்தினர்.........உயிர்களை ஓரறிவுயிர்முதல் ஐந்தறிவுயிர் இறுதியாக அமைத்திருக்குமுறையும்...........இதனைப் புலப்படுத்தும்" என்று ஸ்ரீ சாமிநாதையரவர்கள் எழுதியது இங்கே சிந்திக்கற்பாலது. (மயிலைநாதருரை: முகவுரை: பக். vii.)

உ

கடவுள் துணை.

# பார்வதியார் பாதாதிகேசாந்தவருணனை.

சீர்சால் தக்கன் மகளாய்ச் சிவனார்க்
கேர்கொள் மனையா யிருந்த சதிப்பேர்த்
தேவியோர் பிணக்கிலத் தேகம் விட்டுப்
போயோர் மகவாய்ப் பொறைக்கிறைக் கருளக்
கண்டவவ் விமவான் கொண்டுநோன் பெற்று
மேதகு சிறப்பிற் காதலி மேனைக்
களித்தன னப்போ தந்தர துந்துபி
முழக்கித் தேவர் மழைபோற் பூவைப்
பொழியவு மவளாங் குழவலன் பினளாய்ப்
பெற்றன ளதனைப் பெரிதும் பேணித்
தாறுறு பெருமைக் கானசி ருடனே
நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு
மாவளர்த் திடநன் காவளர் மகவுக்
குற்றா ருறவின் முறையா ருவந்தக்
குலத்திற் கேற்பக் குறித்துப் பெயரைப்
பார்வதி யென்னப் பகர்ந்தன ரன்றியும்
பெரிதும் போற்றிப் புகழ்ந்தன ருவக்கச்
சிற்றி லிழைத்துஞ் சிறுகழங் காடியுஞ்
சேடிய ரிடைநின் றூடிவாள் போன்று
நடித்து மேலைப் படிப்பின் றொடர்பாற்
கற்கா தெல்லாக் கலைக டம்மையுங்
கற்றும் வளரக் கன்னிப் பருவங்
கடந்ததன் பின்னைக் காசினி யதனிற்
பெயர்த்தடி வைக்கும் பொழுதெலா மாத்தங்
கக்குவ போலுயர் கட்டை விரல்களொ
டொட்டுசேர் நகக்களும், ஓர்ந்துயர் வாவா

னிலையிற் றிரிந்த நிலத்தா மரையி
னெழிலைக் கவருவ போன்றிரண் டடிகளும்;
குரலினி தாக்கிக் கொள்ள நூபுரத்
தின்னொலி கற்றங் கிராச வன்ன
மெதிராக் கற்பித் ததனு வியைந்த
தொத்தசைந் தணிசே ருத்தம நடையும்;
படைப்போற் கேனை யுறுப்பிற் காமா
றழகைத் தேடுந் தொழிலைத் தந்தன
போன்றொருங் கமைந்த பொலிவொடு சற்று
மேற்றத் தாழ்வுக ளில்லா தனவா
யிணையொத் தருண்ட கணைக்கா லிரண்டும்;
பொரியரை யுளவா லரிகரிக் கையு
மென்றுமிக் குளவா கின்றதண் மையினு
லீங்குயர் வாழையு மோங்குபே ரெழிலோ
டோருருப் படைத்து நேரவாம் படியீண்
டமையா தனவாய்ச் சமையும் பெருமைக்
கிடமா யிலகுந் துடையோ ரிரண்டும்;
ஏனை நாரியர்க் கெண்ணவு மியலாச்
சங்கரன் மடியிற் றங்கும் பேற்றைப்
பின்னே பெறலாற் றன்னே ரெழிலொன்
றிலதா மொருமே கலையா ரரையும்;
சேலைச் செருகின் மேலா யுறுமே
கலையின் முகத்தி லிலகும் பச்சை
மணிபோன் றொளிசேர்ந் தணியார் மென்கரு
ரோமச் சுழிசூழ் காமரு வுந்தியும்;
நுண்ணிய நுசுப்பும்; கண்ணிய காமற்
கேறும் படியென் றெண்ணும் படியீங்
கிளமையி னிழைத்த வளமார் மூன்று
மடிப்பும்; மரையின் றண்டினி லெடுத்த
நூலுமுண் ணுழைதற் கேலா வகையிற்
பருத்து முகக்கண் கறுத்தழ கமைந்து
புணருஞ் சீரிய துணையாந் தனமும்;

உடைபடு மீனக் கொடியோன் றன்னாற்
கறுத்துக் கால கண்டன் கழுத்திற்
கட்டச் செயவல கெட்டிக் கயிறு
மொள்ளிய வாகை மலரின் மெல்லிய
தன்மையுங் கடந்த மென்மைய வென்றென்
றாகத் திற்கிட மாகுங் கைகளும்;
ஒன்றற் கொன்றெழி லொன்றிய தன்மையி
னணிசே ரிடமே பணியே யெனநல
முத்தின் வடத்தொ டொத்துயர் கழுத்தும்;
சந்திர னிடையிற் றாமரை மணமுந்
தாமரை யிடையிற் சந்திர னொளியுங்
காணா ளாகிப் பேணா தலையுங்
குணமார் திருவவ் வொளியொடு மணமென்
றிரண்டு மொத்தாங் கிருக்கக் கண்டே
தங்கிட மாகுந் துங்கமா முகமும்;
இருசெந் தளிரிடை வருவெண் மலருநல்
வித்துரு மத்திடை யொத்துறு முத்து
முளவே லிணையென் றோதும் படிசெவ்
விதழோ டுறுவெண் முறுவற் றிரளும்;
பிறழத் தொடையைப் பிணைத்த யாழைக்
கோலிற் றட்டக் காலுங் கொடிதா
மொலிபோ லயலில் வளருங் குயிலின்
குரலைத் தன்னுறு மழலைக் கெதிரே
செய்யுந் தெள்ளமு தென்னுங் குரலும்;
கடுவளி தனிலுறு காவியிற் கலங்கி
மான்பிணை வேண்டித் தான்பெற் றனவோ
தானது வேண்டத் தந்தன வோவென்
றெவரு மையுறு மெழிலொடு காதள
வோடிய கண்களும்; கோடிய கரும்பாந்
தன்னுடை வில்லிற் றென்ற லடைந்த
செருக்கை வீடமா மதனைச் செய்வான்
மைதீட் டியதொத் தெய்திய சோட்டோ

டிலகும் வளைந்த புருவத் தெழிலும்;
விலங்கினத் திர்கும் வெட்கமிக் குளதான்
மானம் படவரின் வாழாக் கவரி
மானுறு சிறப்பைக் காணிற் றூனுறு
வாலழ கதனில் வைத்துள மதிப்பைத்
தானே விடுதற் கானபே ரெழிலொடு
கொங்கார் கூந்தற் கற்றையும்; கொண்டின்
டுவமா னப்பொரு ளெனவுள பலவுஞ்
சேர்ந்தோ ரிடத்திற் றிகழக் காண்பான்
மேவிய விருப்பிற் பூவரு மயனுய்ந்
தெழிலோ டமைத்த பழிதீ ருருவொடு
பகலோன் கிரணப் பரப்பா லலர்ந்த
செந்தா மரையுந் தீட்டுங் கோலாற்
செவ்விதி னெழுதிய சித்திர மும்போ
லழகொருங் கமைந்த பளகரு மேனியைப்
புத்திள மையினிற் பிரிப்பது மதற்காங்
கியற்கை யணியா யிருப்பஃது மதுவன்
றுயினு மபக்குவ தாயது மதற்குப்
பூவினீங் கியகல் லேவா யிருப்பது
மாகிய மங்கைப் பருவமாங்
குற்றன ளவ்வென் னுளமம ருமையே.

பார்வதியார் பேரெழிலைப் பாதாதி கேசாந்த
மார்வமதா லாரியத்தி லாராய்ந்து—சீர்வதியுங்
காளிதா சக்கவிஞர் கட்டுரைத்த வாறுரைத்தேன்
கோளிதனிற் கொள்ளீர் குறித்து.

சுபம்.

ஊ. சா. வேங்கடராமன்,
தண்டமிழ்த்தொண்டன்.

---

# நாலடியாரின் காலம்.



தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாலியற்றப்பட்டு யாவராலும் போற்றிப் புகழப்பெற்ற திருக்குறளுக்கு இரண்டாவதாய் நிற்கும் பெருமைவாய்ந்துள்ளது நாலடியாரென்னும் முதுநூலேயாம். இந்நூல் இனிமைவாய்ந்த பப்பத்துவெண்பாக்களாலாய நாற்பது அதிகாரங்களை யுடையது. அறம் பொரு ளின்ப மென்னும் மூன்றனையும் நன்கு விளக்குவது; நச்சினார்க்கினியர், அடியார்க்குநல்லார் முதலிய தொல் லுரையாசிரியர் பலராலும் மேற்கோளாக வெடுத்துக் காட்டப்படும் பெருமைவாய்ந்தது. இந்நூல் கடைச்சங்கம் மருவிய பதினெண்கீழ்க்கணக்குநூல்களுள் முதலாவதென்றும், திருக்குறட்குமுன்ன ரியற்றப்பெற்றதென்றும் கூறுவர் பலர். இதற்கு அன்னார்கூறும் சான்றுவது,

"நாலடிநான்மணிநானாற்பதைந்திணைமுப்
பால்கடுகங்கோவைபழமொழிமாமூல
மெய்ந்நிலைகாஞ்சியோடேலாதியென்பவே
கைந்நிலையவாங்கீழ்க்கணக்கு"

என்னும் வெண்பாவேயாம்.

ஒருநூல் இயற்றப்பட்டுள்ள காலத்தை நடுநிலையுடன் ஆராய்ந்து நிலைநாட்டுதல், அக்காலத்து மாந்தரது வழக்கத்தைத் தற்காலத்து நாமறிந்துகோடற்கு ஏற்ற சாதனமாமென்பது யாவரும் நன்கறிந்த விஷயமே. ஆதலால், அதன் காலத்தையும் அவ்வெண்பா எம்மட்டினுண்மை யென்பதையும் ஈண்டு ஆராய்வோம்.

நாலடியாரிலுள்ள 200-வது 296-வது செய்யுட்களில் பெருமுத்தரையர்* என்னும் ஒரு வகுப்பினர் சிறப்பித்துக் கூறப்பட்டிருக்கின்றனர். அச்செய்யுட்கள் பின்வருமாறு.

---

* இவர்கள் பாண்டியர்களுள் ஒரு வகுப்பினராவர். இவர்களன்றி, மீனவர், தென்னவர், உக்கிரர் என்னும் வகுப்பினர்களு மிருந்தனர். J. S. I. Association Vol. II. page-2-8.

"பெருமுத்தரையர்பெரிதுவந்தீயுங்
கருனைச்சோறார்வர்கயவர்—கருனையைப்
பேருமறியார்நனிவிரும்புதாளாண்மை
நீருமமிழ்தாய்விடும்" (தாளாண்மை. 10 செ.)

"மல்லன்மாஞாலத்துவாழ்பவருளெல்லாஞ்
செல்வரெனினுங்கொடாதவர்நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக்கண்ணும்பெருமுத்தரையரே
செல்வரைச்சென்றிரவாதார்" (மானம். செ. 6)

ஆகவே, இச்செய்யுட்களியற்றப்பட்டகாலத்துப் பெருமுத்தரையர் என்பார் சிறப்புற்றுவிளங்கியிருத்தல்வேண்டும். பண்டைக்காலத்து முத்தரையர் என்று ஒருவகுப்பினர் இருந்தனரென்பது சிலாசாஸனவாராய்ச்சியால் தெரியவருகின்றது. "இவர்கள் காலத்திற்குத் தக்கபடி பல்லவர்களிடத்தோ பாண்டியர்களிடத்தோ கப்பங்கட்டிவந்தனர்." (Pallava Antiquities Vol. II p. 16). இன்னவரில் விடேல்விடுகு முத்தரையனென்பான் மலையடிப்பட்டிச் சாஸனங்களிரண்டில், தான் தந்திவர்மன்கீழ்ச் சிற்றரசனேயென வொப்புக்கொண்டிருக்கின்றான். (J. S. I. Association Vol. II p. 23. Inscriptions 3 and 4.) தவிர, புதுக்கோட்டைச் சமஸ்தானத்திலுள்ள மலையடிப்பட்டி நார்த்தாமலை முதலிய இடங்களிற் குகைக்கோயில்கள்* செதுக்கியிருக்கின்றனர். "அவைகள் சிற்பவடிவு சாஸ்திரப்படி 'பாண்டியன்வடிவை' யொக்குமேயொழிய 'நந்திவர்மன்வமிசத்தியவடிவை' யொவ்வாது." (Pal. Ant. Vol. II p. 16.) நந்திவர்மன் வமிசத்திற்குமுன்பு ஆண்ட ஸிம்ஹவிஷ்ணுவமிசத்தவர்களி லெவராவது முத்தரையர்நாட்டையாண்டதாகத் தெரியவில்லை. அக்காலத்தி லிந்நாட்டிலும் சோழர்களிருந்ததாகவுந் தெரியவில்லை. ஆகவே ஸிம்ஹவிஷ்ணுவமிசகாலத்தில் இவர்கள் இந்நாட்டி லாண்டுவந்தனர். ஆனால் அவர்கள் ஆண்டது மதுரையைத் தலைநகராகக்கொண்டு ஆண்டுவந்த பாண்டியர்களின் கீழோ அல்லது தனிமையாகவோ என்பது நமக்குத் தெரியாது. நாலடியாரிற்

* குகைக்கோயில் என்பது ஒரு மலைக்குள் குடையப்பட்டு, அநேகமாக ஒரு தாழ்வாரத்தையும் அறையையும் உடையதாயிருக்கும். அவ்வறையுள், சுவாமிவடிவ மிருக்கும். இதுதான் மணிமேகலையிற் 'குச்சரக்குடிகை' எனக் கூறப்பட்டது.

கூறப்பட்டதிலிருந்து இவர்கள் அச்சமயத்துப் பாண்டியர்களின் கீழோ அல்லது தனிமையாகவோ அரசுநடாத்திவந்திருக்கவேண்டும் என அறிகின்றோம். நாலடியார்காலம் கி. பி. 717க்குப் பிறகே யாரம்பிக்கின்றது. ஆகவே நாலடியார் 717க்குப்பிறகு இயற்றப்பெற்றதாகும். அதிலிருந்து நாலடியார் என்பது கி. பி. ஏழாம்நூற்றாண்டின்கடைசியிலோ எட்டாம்நூற்றாண்டின் முதலிலோ எழுதப்பட்டிருத்தல்வேண்டும் என்பது விளங்கியவாறு கண்டுகொள்க.

கடைச்சங்கம் கி. பி. இரண்டாம்நூற்றாண்டிலும் அதற்கு முந்தியகாலங்களிலும் நடைபெற்றதாதலின் நாலடியார் கடைச்சங்கம் மருவிய நூல்களிலொன்றன்றென்பது நன்கு வெளியாதல் காண்க.

இனி, நூலின்றுவக்கத்தில் அருகக்கடவுள்வணக்கங் கூறப்பட்டிருப்பதால் நூலியற்றியோர் ஜைனரென்பதும், பதுமனாரால் அதிகாரம் பெறத் தொகுக்கப்பட்டிருப்பதால் நூலிலுள்ள செய்யுட்களெல்லாம் ஜைனமுனிவர்பலரா லியற்றப்பெற்றதாகுமென்பதும் இனிது புலப்படும். அன்றியும், இந்நூலை முழுதும் நன்காராய்வார்க்கு இந்நூலிலுள்ள செய்யுட்களெல்லாம், பலரால், ஒருகாலத்தி லியற்றப்பெற்றுப் பின்னர் ஒருவரால் தொகுக்கப்பட்டிருக்கவேண்டுமென்பது விளங்காமலிருக்காதென்க. இதனால், கடைச்சங்ககாலத்திற்குப்பிறகு ஜைனமுனிவர் பலர் ஒருங்குசேர்ந்து, தமிழ்வளர்ப்பதற்கு மிக முயன்றுள்ளனரென்பது வெளியாகின்றது. இனித் திகம்பரதரிசனம் என்னும் ஜைனநூலில், தென்மதுரையகத்துப் பூஜ்யபாதர்மாணாக்கர் வச்சிரநந்தி என்னும் ஜைனமுனிவரால் ஒரு தமிழ்ச்சங்கம் கூட்டப்பட்டதென்று கூறப்பட்டிருக்கின்றது*. இச்சங்கம் மூந்நூற்றுவரைப் புலவராகவுடையது. ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகிய சீவகசிந்தாமணி அரங்கேற்றப்பட்டதும் எலிவிருத்தம், நரிவிருத்தம், கிளிவிருத்தம் முதலிய நூல்களியற்றப்பட்டதும் இச்சங்கத்திலேதான்.†

இச்சங்கத்திருந்த புலவர் பலரும் ஜைனராதலின் இவர்கள் காலத்திருந்த பாண்டியனும் ஜைனமதப்பற்றுடையனாகி அம்மதத்திற்புகுந்து

---

* செந்தமிழ் மூன்றாந்தொகுதியுள், பிர்ம்மஸ்ரீ ரா. இராகவையங்காரவர்கள் எழுதியுள்ளதைப்பார்க்க.

† இது அடுத்த விஷயத்தில் நன்கு விளக்கப்படும்.

சைவத்தை யிகழ்ந்து வந்தனன். ஆயினும் இவனது கற்புடை மனைவியாகிய மங்கையர்க்கரசியாரும் மந்திரி குலச்சிறையாரும் சைவசமயத்தில் மிகுந்த பற்றுள்ளவர்களாதலின் அரசனறியாவண்ணம் தங்கள் மதத்தைப் பரிபாலித்துவந்தார்கள். இவர்கள் இருவருமே பரசமயகோளரியாகிய திருஞானசம்பந்தசுவாமிகளை வரவழைத்து மேற்கூறிய சங்கத்து ஜைனமுனிவர்களுடன் வாதஞ்செய்து சைவசமயத்தை மீண்டும் நிலைநிறுத்தினார்கள். சைவசமயாசாரியராகிய திருஞானசம்பந்தசுவாமிகளுடன் அனல்வாதஞ்செய்து தோல்வியடைந்து புனல்வாதஞ்செய்யப் புகுந்த மேற்கூறிய சங்கத்து ஜைனமுனிவர்களாலியற்றப்பட்ட செய்யுட்களே பின்னர்ப் பதுமனால் நாலடியாரென்னும் பெயருடன் தொகுக்கப்பட்டது. ஜைனவித்வான்கள் பலரும் நம் சுவாமிகளுடன் செய்த புனல்வாதத்திலும் தோல்வியடைந்தனராயினும் அவர்களது செய்யுட்கள் பலநீதிகளை இனிமைவாய்ந்த வெண்பாக்களில் எடுத்துக்கூறியமையால் அவற்றை யவமே போக்காது பதுமனார், திருக்குறளை முழுதும் பின்பற்றி, முப்பால்படும் வண்ணம் தொகுத்தனரென்ப. வைணவ சமயாசாரியராகிய நம்மாழ்வார் வாதஞ்செய்தது மிச்சங்கத்தாரோடுதான்.

பாண்டியன் நெடுமாறனையே முடத்திருமாறனென்றும், கூன்பாண்டியனென்றும் சுந்தரபாண்டியனென்றும் வழங்குவர். இவ்வரசர் பெருமானுக்கே "நெல்வேலிவென்ற நெடுமாறனடியார்க்கு மடியேன்" என்று திருத்தொண்டத்தொகையில், சுந்தரமூர்த்திசுவாமிகள் வணக்கங் கூறியுள்ளார்கள். (பாட்டு 8.) இவன் நெல்வேலியில் நடந்தவொரு பெரும்போரில் வாகைமிலைந்தனனென்பது வேள்விக்குடிச் செப்பேடுகளால் நன்கு விளங்குகின்றது. அது இவன் "நெல்வேலிப்போரில் வில்வேலியின் கடல்போன்ற படையை ஜெயித்துக் கேரளராஜாவின் சேனையையும் வென்றான்" எனக் கூறுகின்றது. இவருடன் சமகாலத்தவரான சம்பந்தர், முதல் நரஸிம்மவர்மன் என்னும் பல்லவ அரசனுடன் வாதாபியைவென்ற சிறுத்தொண்டநாயனாரின் சமகாலத்தவராவர். (பெரியபுராணம். 318.) "அவர்கள் வாதாபியைக் கைக்கொண்டது கி. பி. 642க் கணித்தாகும்." (The Pallavas by G. Jourean-Dubrevil p. 40.) ஆகவே நெடுமாறன் கி. பி. 650க் கணித்தாக வாழ்ந்தவனேயாம்.

அன்றி, முதலாம் பரமேசுவரவர்மன் வீரச்செயல்களைப்பற்றிக் கூறும் "கூரம் செப்பேடுகள்" "அநேகலக்ஷம் படைகளையுடைய விக்கிரமாதித்தனைத் தோற்கடித்து ஒரு கந்தைத்துணியைமட்டும் மூடிக் கொண்டு பிறகிட்டோடும்படி செய்தான்," எனக் கூறுகின்றன. அவ் விக்கிரமாதித்தன் உறையூரிலிருந்தபோது கொடுத்த 'காட்வல் (Gadval) செப்பேடுகள் அது கி. பி- 674ல் நிகழ்ந்தது என்று நிச்சயமாகக் கூறுகின்றன. அப்பொழுது ஆண்டுவந்தவனும் அச்சண்டையில் விக்கிரமாதித்தனை எதிர்த்தவனுமாகிய பாண்டியன் கோச்சடையனைப்பற்றி 'அவன் மருதூரிற் கடல்போன்ற சேனையைவென்று மங்கலபுரம் என்னும் பெரியபட்டணத்தில் வைத்து மஹாரதனையும் வென்று அழித்தான்." என வேள்விக்குடித் தானசாசனம் கூறுகின்றது. இக்கோச்சடையன் நெடுமாறனது புதல்வனாகும். ஆகவே பாண்டியன் நெடுமாறன் 650க் கணித்தாக வாழ்ந்தவனே.

இதிலிருந்து அனல்வாதம் புனல்வாதஞ் செய்து தோல்வியடைந்த மேற்கூறிய ஜைனமுனிவர் பலரால் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் மத்தியிலியற்றப்பெற்றது நாலடியாரென்பதும், பின்னர் நாலடியார் என்னும் பெயருடன் அதிகாரம்படப் பதுமனாரால் தொகுக்கப்பட்டதென்பதும், "நாலடி,..........கீழ்க்கணக்கு" என்னும் வெண்பா, பிற்காலத்திலொருவராற் காலவரிசைநோக்காது எதுகை மோனை நோக்கி இயற்றப்பட்டதென்பதும் நன்கு விளங்கியவாறு கண்டுகொள்க.

வாலிபர் தென்னிந்தியசரித்திர வாராய்ச்சிச் சங்கம், கும்பகோணம். — நா. சுப்பிரமணியன். காரியதரிசி.

# ஒரு விஞ்ஞாபனம்.

பன்னருஞ்சிறப்பிற் பவணந்திமுனிவருளிய "நன்னூ"லில் உத்தமமாணாக்கருக்கு அன்னத்தை உவமைகூறினர்; அதற்கு உரைகாரரெல்லாம் பாலும் நீரும் பிரித்துப்பருகும் அன்னம்போலுமென்றார். அன்னத்திற்குப் பாலும் நீரும் பிரித்துப்பருகுந்தன்மை யுண்டா? அப்பறவை தற்போது எங்குள்ளது? இதற்கு நூற்சாக்ஷியுண்டா? இவற்றிற்கு விடையளித்து எனது அறியாமையை அகற்றும்படி அறிஞர்களை வேண்டுகின்றேன். — ப. மு. மதுரையார்.

உ

# இந்தியரின் பள்ளியெழுச்சி.

---

(1) கிழக்கொளி கிளர்ந்தது; கிழிந்தது இருளும்;
கேடுறு மெனவிண்மீன் ஓடுறும் கடலுள்;
விளக்கொளி மழுங்கின; மழுங்கிற்று மதியம்
வீரியர் முன்வலி பூரியர் கெடல்போல்;
வழக்கொலி யதிர்ந்தது; அதிர்ந்தது சங்கம்;
வயப்பறை யொலித்தது; மாந்தரும் தாந்தம்
இழக்கரு மேனிலைக் கெழுந்தன ரதனால்
இந்தியரே பள்ளி யெழுந்தரு ளீரே.

(2) சோலையும் கலித்தது; துறைகளும் கலித்த;
தூவின மலர்மணம்; கூவின சேவல்;
வேலையும் கொதித்தெழல் விண்டது சுழல்வோர்
வெவ்வுரை பொழிந்தயர்ந் தடங்கிடல் போல;
ஆலயந் தொறும்முழ வரற்றின; குளிர்நீர்
ஆடலே வேண்டினர் ஈண்டினர் மறுகில்;
ஏலமார் குழலியர் இசைத்தனர் எழுந்தார்;
இந்தியரே பள்ளி யெழுந்தரு ளீரே.

(3) கதிரெனுங் கைகொடு ஒளிக்கள்வன் மலரின்
கதவங்கள் திறந்தனன் பைப்பயக் கள்ளில்
கொதியெழு வண்டினம் கூக்குர லுடனே
கோட்டையுட் புகுந்தன வேட்டைவந் தெனவே;
அதிசயம்! ஈயெறும் பாதிய எல்லாம்
அடுத்ததந் தொழிலையே தொடுத்தன போகா;
எதுசெய லாகினும் தாழ்த்திட லாகா;
இந்தியரே பள்ளி யெழுந்தரு ளீரே.

(4) காணள வில்லதோர் காலம்நீர் கும்ப
கருணனைப் பூசித்தே கலங்கினீர் தொழிற்கு;
மாணளவில் மேற்கர் மதியினில் நிதியில்
வலியரோ யெனினுமோர் எறும்புந்தன் கைக்கெண்

சாணை வென்றநீர் தரித்திலீர்; சோம்பல்
தழைத்துயர் கிளையின்கீழ்ச் சாய்ந்துளீர் சயனம்;
ஏணை யில்லவர் எங்கும் எழுந்தார்
இந்தியரே பள்ளி யெழுந்தரு ளீரே.

(5) எழுந்தனர் ஈனரென் றெண்ணிய பல்லோர்
ஏற்றமாம் ஜாதிக்கோர் கூற்றுவ ரெனவே;
எழுந்தனர் தொழில்புரிந் தெய்க்கின்ற கையார்
இடும்பையே தருஞ்செல்வம் இடும்பை கீறிடவே;
எழுந்தன ஜனத்திரள் இருட்டறை விட்டே
இந்திர வாசகம்தம் மந்திரம் நிற்க;
எழுந்தனர் சிறுவரும் இசையுறு நசையால்;
இந்தியரே பள்ளி யெழுந்தரு ளீரே.

(6) வேலையுங் கடந்துளீர்; வெற்றுரை நம்பி
விட்டுளீர் செல்வமும் வீரமும் ஒருங்கே
சாலையுந் தாழிட்டுச் சாத்தினீர்; ஞானம்
தருதற்கோ வருதற்கோ வழியிலை; எமனார்
ஓலையும் மறந்துநீர் ஒன்றுஞ் செய்யாதே
உறங்குகின்றீர்; கற்பம் இருப்பவரோ தாம்!
ஏலா திப்பணி இனிச்செயல் வேண்டும்;
இந்தியரே பள்ளி யெழுந்தரு ளீரே.

(7) உடலையும் வெறுத்துளீர் உறவையும் வெறுத்தீர்
உடைமையும் வெறுத்துளீர் ஊக்கமும் வெறுத்தீர்;
திடமுள செயல்செயல் தீவினை யெனவே
செப்பினீர்; தீச்செயல் விலக்கலீர்; பெரிய
மடமுள விடங்களில் வாழ்ந்துளார் போல
மயக்கமுந் தியக்கமும் மருவினீர்: இனிநம்
மிடமுள குற்றங்கள் இவைவிடல் வேண்டும்;
இந்தியரே பள்ளி யெழுந்தரு ளீரே.

K. N. சிவராஜன் பீ.ஏ.,

---

ஸ்ரீ:

# திருநறையூர் நம்பி
# மேகவிடுதூது.



இது

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்

"செந்தமிழ்" உதவிப்பத்திராதிபர்

## இராமாநுஜையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப் பிரசுரம்—சரு.

மதுரைத்

தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1921.

ஸ்ரீ:

# முகவுரை.

அமிழ்தினுமினிய தமிழ்மொழியகத்தே அகப்பொருளும் புறப் பொருளும்பற்றி ஆன்றோரா லழகுபெறப் பாடப்பட்ட பிரபந்தங்களும் அனந்தமே. அவற்றுள் தூதுப்பிரபந்தங்களு மடங்கும்.

மேகவிடுதூது என்பது மேகமாகிய விடுதூதையுடையதென விரியு மன்மொழித்தொகையாய்ப் பிரபந்தத்துக்குப் பெயராயிற்று. மேகத்தைத் தூதுவிட்ட விருத்தாந்தமுடையதென்பது கருத்து.

திருநறையூர்நம்பி மேகவிடுதூது என்னு மிது, 'காமப்பகுதிகடவு ளும்வரையார்' என்ற விதிப்படி, திருநறையூரிலே கோயில்கொண்டெழுந் தருளியுள்ள நம்பியிடத்து மால்கொண்ட ஒரு தலைவி, அவரிடத்தே தன் னாற்றாமையைத் தெரிவித்து அவரணிந்த திருத்துழாய்மாலையை வாங்கிவரும்படி மேகத்தைத் தூதுவிடும் விருத்தாந்தத்தை விடயமாக வைத்து மிகவும் நயமுடையதாகப் பாடப்பட்டிருப்பதொரு கலிவெண் பாட்டு.

திருநறையூர் என்பது சோழநாட்டுத்திருப்பதியுள் ஒன்று. சோழன் கோச்செங்கணான், நம்பியைப்பணிந்து சேரபாண்டியர்களை வெல்லுதற்கு வெற்றிவாள்பெற்ற தலம் இது. இன்னும், இதன் மான்மியமெல்லாம் இந்நூலின் 60-முதல் 140-வரையுள்ள கண்ணிகளால் விளங்கும்.

இப்பாட்டின் முதலிலுள்ள "போதுமணவாளனங்கு" என்னுஞ் செய்யுளால் இது திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்காரால் இயற்றப் பட்டதென்று தெரிகிறது. ஆழ்வாராசார்யர்களைப் பின்பற்றி அவர்கள் மங்களாசாசனம்செய்துபோந்த திவ்யதேசங்களுக்கெல்லாம் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியும் அவற்றுட்சிறந்த கோயில், திருமலை, திருமாலிருஞ் சோலைமலை என்ற மூன்று திவ்யதேசங்களுக்கும் முறையே திருவரங்கத் தந்தாதி, திருவரங்கக்கலம்பகம், திருவரங்கத்துமாலை; திருவேங்கட மாலை, திருவேங்கடத்தந்தாதி; அழகரந்தாதி என்ற பிரபந்தங்களும் அருளிச்செய்த திவ்யகவி, ஆழ்வார்களுள், "மாறன்பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங்கூறவவதரித்த" திருமங்கைமன்னனைப் பின்பற்றி,

அவர் அதிகமாக ஈடுபட்டுப் பல திருப்பதிகமருளிச்செய்து மடலியற்றிய திருநறையூர்நம்பிவிஷயத்தி லிப்பாட்டையியற்றின ரென்பது பொருத்த மானதென்று தோன்றுகிறது.

மேலும், இப்பாட்டு 'சொல்லனேக்கும்பொருளனேக்குந்தொடைநோக்கு நடைநோக்குந் துறையினேக்கோ—டெந்நோக்குங்காணஇலக்கியமா' யமைந் திருப்பதும்,

"கேசவனையேசெவிகள்கேட்கத்திருவரங்கத்
தீசனையேசென்னியிறைஞ்சிடுக—நேசமுடன்
கண்ணனையேகாண்கவிருகண்ணிணைகள்கொள்காயாம்பூ
வண்ணனையேவாழ்த்துகவென்வாய்"

என்ற திருவரங்கக்கலம்பகச்செய்யுளோடொப்ப இப்பாட்டின் 192-முதல் 198-வரையுள்ள கண்ணிகள் அமைந்திருப்பதும், இதிற் பலவிடத்தும் அஷ்டப்பிரபந்தநடைபோடொத்த நடை விரவிவருவதும் அவ்வாறு கொள்வதற் காதாரமாகும்.

இப்பாட்டு இருநூறுகண்ணிகளாற் பல அரியவிஷயங்களை விளக்கி அநேக சரிதங்களும், மடக்கு, முரண், உவமை, பின்வருநிலை, சிலேடை முதலிய பல அணிகளும் உடையதாய்ப் படிப்பவர்க்கு மிக்க இனிமையுடையதாகவும் எளிதிற் பொருள்விளங்குவதாகவும், கற்போர்க்குச் செய்யுள் செய்யுந்திறமையை உண்டாக்க வல்லதாகவும் இயற்றப்பட்டிருக்கிறது.

இப்பிரபந்தம் இதற்குமுன் அச்சிடப்பெற்றிருப்பினும், பிரதிகள் கிடைத்தற்கரிதாயிருப்பதுபற்றிக் குறிப்புரையுடன் இப்பொழுது செந்தமிழ்ப்பிரசுரமாக வெளியிடப்பட்டது.

இதை யச்சிட்டதிற் சிற்றறிவுடைய என்னால் எற்பட்ட பிழைகளை அறிஞர்கள் பொறுத்துத் திருத்தியளிக்குமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

இராமானுஜையங்கார்,

உதவிப்பத்திராதிபர்,

செந்தமிழ்.

---



ஸ்ரீ:

# திருநறையூர் நம்பி மேகவிடு தூது.

## தனியன்.

### நேரிசைவெண்பா.

போதுமனை வாளணங்கு புல்லுநறை யூர்நம்பி
மீதுமனை வாளருண் மேகவிடு—தூதுதனைச்
சொல்லுவார் கேட்பார் துதிப்பாரிம் மேதினிமேல்
வெல்லுவா ரெல்லாம் விரைந்து.

## காப்பு.

### நம்மாழ்வார்.

நாரணனை யெவ்வுயிர்க்கு நாயகனை யண்டாண்ட
பூரணனை நாகணையிற் புண்ணியனை—வாரணமுன்
வந்தானை யேத்து மறையா யிரந்தமிழாற்
றந்தானை நெஞ்சே தரி.

### திருமங்கையாழ்வார்.

நாட்டியசீர்த் தென்னறையூர் நம்பி திருவடிக்கே
சூட்டியதோர் மேகவிடு தூதுக்குக்—கூட்டம்
பொலியன்ப ரேத்தும் புனலாலி நாடன்
கலியன் பரகாலன் காப்பு.

# நூல்.

## கலிவெண்பா.

1 சீர்கொண்ட செங்கமலச் செல்வத் திருமகளு
நீர்கொண்ட வேலை நிலமகளு—மோர்கொண்ட

2 காந்தண் மணிக்கடகக் கைபா லடிவருடப்
பாந்தண் மணிச்சுடிகைப் பாயன்மேற்—சேர்ந்துறங்குஞ்

3 செங்கண்மா லுந்தித் திருத்தா மரைப்பிறந்த
வெங்கண்மா ஞாலத் தனைத்துயிர்க்குந்—தங்காமும்

4 மாரி வழங்குதன் மாறுமே கைம்பாறு
காரிய மென்று கருதாமே—பாரிற்

5 றுளிக்கின்ற தண்ணந் துளியமுத நல்கி
யளிக்கின்ற கொண்மூ வரசே—களிக்கின்ற

6 மேலுலக மேறி விரிஞ்சநா மம்படைத்து
நாலு திசைமுகமு நண்ணுதலான்—மாலுமா

7 நீலநிற மாகி நிறைகமலக் கண்ணாகிக்
கோல வளையாழி கொள்கையாற்—சூலம்

---

௧ முதல் ௧௧—கண்ணிவரை மேகத்தின்சிறப்புக் கூறப்படுகிறது.

2. கடகம்-வளை. பாந்தள்-பாம்பு. சுடிகை-தலை.

3. உந்தி-கொப்பூழ். தங்கா-தங்கி.

5. கொண்மூ, புயல், கொண்டல், மேகம், மஞ்சு, மங்குல், கனம், எழிலி, பயோதரம், விண், கார், கந்தரம், மாரி என்பன ஒருபொருட் சொற்கள்.

6. இது முதல் மூன்று கண்ணிகளால் முறையே பிரும்ம விஷ்ணு, ருத்திரர்க்கும் மேகத்துக்குஞ் சிலேடை கூறப்படுகின்றது. அவற்றுள், பிரமனுக்கும் மேகத்துக்குஞ் சிலேடைவருமாறு:—

மேலுலகமேறி-1. சத்தியலோகத்தையடைந்து, 2. ஆகாயமாகிய இடத்தையடைந்து. விரிஞ்சநாமம் படைத்து-1. விரிஞ்சன் என்னும்பெயரையடைந்து, 2. பரந்த அச்சத்தை விளக்கக்கூடிய கடல்நீரைக்கொண்டு. நாலுதிசைமுகமு நண்ணுதலால்—1. நான்குதிக்கிலுமுகத்தையுடைமையால்; 2. நான்கு திக்கிலுஞ் செல்லுதலால்.

7. திருமாலுக்கும் மேகத்துக்குஞ் சிலேடை. மாலும்-மயக்கத்தைச்செய்கின்ற. மா-பெருமைமிக்க.

நிறைகமலக் கண்ணாகி-1. தாமரைப்புஷ்பம்போன்ற ஆயிரம் கண்களையுடையனாய், 2. மிக்கநீரைத் தன்னிடத்தே கொண்டதாய். கோலவளையாழி கொள்கையால்-1. அழகிய சங்கு சக்கரங்களைத் தரித்தலால், 2. அழகிய சங்குகளையுடைய (அல்லது உலகைச் சூழ்ந்துள்ள) கடலையுட்கொள்ளுதலால்.

8 விரவிய பாணியாய் மின்னையிடந் தாங்கி
யரவ மணியு மழகால்—வரமளிக்கு

9 மெத்தே வருக்கு மிறைவராய் மேலாய
முத்தே வருநிகரா மூர்த்தியே—மைத்தகன்ற

10 வானத்து ளேபிறந்து வானத்து ளேதவழ்ந்து
வானத்து ளேவளரும் வானமே—வானத்து

11 வேலைவாய் நீருந்தி வெற்பி லாசிருந்து
சோலைவாய்க் கண்படுக்குந் தோன்றலே—ஞாலமிசைத்

12 தானமு மெய்யுந் தருமமுங் கல்வியு
மானமுந் தானமு மாதவமு—நானக்

13 கருங்கொண்டை மங்கையர்தங் கற்புநிலை நிற்ப
தருங்கொண்ட லேயுனைக்கொண் டன்றோ—நெருங்குமுவ

14 ராழிநீர் துய்ய வமுதநீ ரானதுவும்
வாழிநீ யுண்ட வளமன்றோ—தாழுமடி

15 யாவுஞ்சிந் தாமணியு மம்புயமுஞ் சங்கமுங்
காவும் பணியவுயர் கார்வேந்தே—நாவினுற்

---

8. சிவனுக்கும் மேகத்துக்குஞ் சிலேடை. சூலம் விரவியபாணியாய்-1. சூலாயுதம் பொருந்திய கையை யுடையவனாய்,2.சூற்கொண்ட நீருடன் கூடிய அழகுடையதாய். மின்—1. பார்வதி,2. மின்னல். இடந்தாங்கி-1.இடப்பாகத்தேகொண்டு, 2. தன்னிடத்தே கொண்டு. அரவம்-1. பாம்பு, 2. ஓசை.

9. படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலு மியற்றற்குரிய எல்லா வன்மையுமுடைய நின்னிற் சிறந்தா ரொருவருமில்லை யென்பது குறிப்பு.

10. இது சொற்பொருட் பின்வரு நிலை. வானத்துளே வளரும் வானம் என்றது முரண்விளைந்தழிந்த வியப்பு. வானத்துவேலை-பெரிய சங்கினையுடைய கடல்.

11. கண்படுத்தல் — உறங்குதல். (இது குறிப்புமொழி)

12. நானம்—கத்தூரி.

14. பிறரா லமுதநீருண்ணப்படினும் அது ஆழிநீர்போ லுவராவதாக நீ யாழிநீரையுண்ணினும் அது அமுத நீராக வெளிவிடுதலால் யான்சொல்லு மவற்றுள்ள குற்றங்களை நீக்கிக் குண முடையனவாகக் கூறவல்லை என்பது குறிப்பு. பிறவும் இங்ஙனமே காண்க.

15. ஆ-காமதேனு. அம்புயம்,சங்கு என்பவை இங்குப் பதுமநிதி, சங்கநிதி களை யுணர்த்திவந்தன. கா—கற்பகச் சோலை. கொடையான் மிக்க இவை பணியும்படியுயர்தல்—தன்னை அவைகளும் விரும்பி எதிர்பார்க்கும்படியான கொடையான்மிகுதல்.

16 சாதகமுந் தோகைத் தனிமயிலும் போலவே
மேதகையை நின்வரவை வேட்டிருந்தேன்—பூதலத்துப்

17 பல்லுயிருங் காக்கப் பாரமா முனக்கென்று
புல்லுயிருங் காக்கிற் புகழன்றே—வல்லதொரு

18 சீருயிரு மேகமே செங்கண்மாற் காளானே
ஓருயிரு மேகமே யல்லவோ—பேரரவ

19 நீலமஞ்சே கேட்டியா னின்னையல்லா தென்னையிந்தக்
காலமஞ்சே லென்பாரைக் காண்கிலே—னேலமரு

20 விண்மாரி யேபெருமான் வேரித் துழாய்வேட்டென்
கண்மாரி பெய்வதெல்லாங் கண்டாயே—தண்மை

21 விளையும் பயோதரமே வெம்பாத செம்பொ
னளையும் பயோதரமே யானேன்—கிளைபிரியாக்

22 கோல மழையே குயின்மா ரனையந்திக்
கால மழையாமே காப்பாரார்—நீலநிற

23 மங்குலுக்கு வேந்தே மலர்க்கண் புதைத்தனைய
கங்குலுக்கு நெஞ்சங் கரைகின்றே—னிங்கு

24 கடந்தகன மேழுலையி னாலுந் தாள
வடந்தகன மேசெய்து மாய்த்தேன்—விடந்திரண்ட

25 திங்களெழி லிக்குச் சிலைமார வேண்முனியி
லெங்களெழி லிக்காசே யென்செய்கேன்—மங்கலமா

---

16. மேதகையை-முன்னிலைவிளி. மேம்பட்டதகுதியையுடையோய் என்பது பொருள். வேட்டல்-விரும்புதல்.

17. பாரம்-பொறுப்பு. இது முதல் உள ஆங் கண்ணிவரை தலைவி மேகத்தை நோக்கித் தனது எளிமை கூறுகிறாள்.

18. சீருயிரும்-சிறப்பா னுயர்தலையுடைய. அகரம்தொகை நோக்கி ஓகாரமாய்த் திரிந்துநின்றது. முதல் அடியில் மேகமென்றும் இரண்டாமடியில் ஏகம் என்றும் பிரிக்க. ஏகம்-ஒன்று

20 வேரி—வாசனை.

21. பயோதரம்-1 மேகம்,2 தனம். வெம்பாதசெம்பொன்-தேமல்.

23. கங்குல்—இரவு.

24. நாலுதல்-தொங்குதல். தாளவடம்—முத்துமாலை. தகனம்செய்து-எரித்து.

25. எழில் இக்குச்சிலை—அழகிய கரும்புவில். மாரவேள்—மன்மதன்.

26 மிந்திரவில் வாங்கி யெழுகின்ற மைப்புயலே
வந்திரவில் வாடை வருத்துங்காண்—அந்தரத்து

27 விண்ணே யுனக்கிவற்றை விண்டுரைத்தே னல்லாதெ
னுண்ணேய வேட்கையெவர்க் கோதுவேன்—கண்ணழலால்

28 வெந்தா னிலத்துக்கும் வீறுகத் தாங்குகையான்
மந்தா னிலத்துக்கும் வாய்திறவே—னந்தக்

29 குருத்தத்தை மாரன் குரகதமா மென்றே
வருத்தத்தை யங்குரைக்க மாட்டேன்—கருத்துள்ள

30 மாதண் டலைவாய் மதுகரத்துக் கும்மவன்றன்
கோதண்ட நாணென்று கூறேனே—மூதண்ட

31 கோளக் குயிற்கெல்லாங் கோவே யவன்றனது
காளக் குயிற்குங் கழறேனே—னொன்றி

32 லன்புரு வுக்கு மாசனுட லீர்வித்த
புன்புரு வுக்கும் புகன்றிடேன்—மென்புரத்துக்

33 கோம்பிக் குடல்பனிக்குங் கொச்சைமட மஞ்ஞைக்குஞ்
சோம்பித் தளருந் துயர்பணியேன்—றேம்பிரச

34 நிற்கின்ற பூவைக்கு நீள்குழலார் சொல்லிபதே
கற்கின்ற பூவைக்குங் கட்டுரையேன்—பொற்கால்

---

26. இந்திரவில்—வானவில். வாடை இரவில் வந்து வருத்து மெனக் கூட்டுக.

27. வேட்கை—காதன்மிகுதி.

28. இதுமுதல் 36 வரை யுள்ள கண்ணிகளாற் றென்றல், கிளி முதவியன தூதுசெல்லத் தக்கனவல்லவென்று தலைவி கூறுகிறாள். கண்ணழலால் வெந்தான்—மன்மதன். நிலத்துக்கும்-பூமியில் பொடியாயுதிர்ந்துவீழ்ந்தும். வீறுக—வன்மையடையும்படி. (இறந்தொழிந்த மன்மதனும் இயங்கும்படி) தாங்குகையால்—தேராயிருந்து தாங்குதலால். மந்தானிலம்-தென்றற்காற்று.

29. குருத் தத்தை-நிறத்தையுடைய கிளி. மாரன்-மன்மதன். குரகதம்—குதிரை.

30. தண்டலை—சோலை. மதுகரம்—வண்டு. கோதண்டநாண்-வின்னாண்.

31. குயில்—மேகம். காளம்—சிறுச்சின்னம். கழறுதல்-சொல்லுதல். நாள் ஒன்றில்-ஒருகாலத்தில்.

32. அன்புரு-அன்புற்று. உக்கும்-மனம் கரையும். அரசன்-இங்கு சிபிச் சக்கரவர்த்தி. உடல்-சரீரம். ஈர்வித்த—அறுக்கச் செய்த. புகலுதல் - சொல்லுதல். மென்புரம்-மெல்லியவுடல்.

33. பனித்தல்-நடுங்குதல். கொச்சை-இழிவு. மஞ்ஞை-மயில். பணித்தல்-சொல்லுதல். தேம்பிரசம்-இனியதேன்.

34. பூவைக்கும்-பூச்சூடிய. பூவை-நாகணவாய்ப்புள். கட்டுரைத்தல்-சொல்லுதல்.

35 வெறிப்பதும விட்டன்னம் வெண்பாலு நீரும்
பிறிப்பதுபோ னட்புப் பிறிக்கும்-குறிப்பறிந்து
36 காதலா னுள்ளக் கவலை யதுகேட்க
வோதலா காதென் றுரையாடே-னாதலா
37 னுள்ளே புழுங்குவ தன்றி யொருவருக்கும்
விள்ளே னுனக்கு விளம்பினேன்-றெள்ளியநூ
38 லோதுவா ரெல்லா முதவுவார்க் கொப்புரைக்க
வேதுவாய் நின்ற வெழிலியே-பூதலத்துப்
39 பெய்யுதவி யும்புரிந்தாற் பேச்சுதவி யுஞ்சிறிது
மெய்யுதவி யும்புரிய வேண்டாவோ-துய்ய
40 அடலாழி யானடிக்கே யன்பாய காதற்
கடலாழி மூழ்கினேன் கண்டா-யுடல்வாடி
41 விம்முகிலே சந்தாக மீளத் திருமால்பான்
மைம்முகிலே சந்தாக மாட்டாயோ-பெய்ம்மதவேள்
42 தண்ணப்பஞ் செய்வதெலாந் தாமோ தரனடிக்கீழ்
விண்ணப்பஞ் செய்தருள வேண்டாவோ-வெண்ணத்தின்
43 சிதரனை நீயிரந்து தெய்வத் துழாய்கொணர்ந்தெ
னாதரவு தீர்த்தருள லாகாதோ-கேதகைக்கு
44 மின்கேள்வ னாக்கியநீ விண்ணோர் பெருமானை
யென்கேள்வ னாக்கிறை லோராதோ-முன்கேட்டு

---

35. வெறி-வாசனை. பதுமம்-தாமரை. அன்னம், பாலையும் நீரையும் பிரித்துண்ணுமென்பது கவிமரபு. இது "நீர்பிரித்தமிர்துண்ணுநீர்மையினோதிமம் - ஓரிருபான்மைக் குவமையதாகும்" என மாறனலங்காரத்துள்ளும், "பாலிருந்த நீர் பிரிப்பீர்" என அழகர்கலம்பகத்துள்ளும் பயின்றுள்ளது.

38 முதல் 51 வரையுள்ள கண்ணிகளால், மேகத்தினிடமமைந்த தூது சொல்லற்குரிய தகுதி விளக்கப்படுகிறது.

38. ஆதலால் நீ எனக்குத் தவறாது தவாயென்பது குறிப்பு.

39. பேச்சுதவி - தூதுசொல்லல். மெய்யுதவி-சரீரஉபகாரம்; அது தூது செல்லல்.

40. அடல்-வலி. ஆழி-சக்கரம். கடலாழி இருபெயரொட்டுப்பண்புத்தொகை. ஆழ்கடல் என்பது பொருள்.

41. விம்மு கிலேசம்—அதிகரித்த கவலை. சந்து-தூது. மதவேள்-மன்மதன்.

42. தண் அப்பு அஞ்சு எய்வது—குளிர்ந்த (புஷ்ப) பாணங்களைந்தையும் எய்வது. விண்ணப்பம் செய்தல்-சொல்லுதல். வெண்ணத்தின் சிதரன்-வெள்ளிய சங்கத்தினையுடைய திருமால்.

43. கொணர்ந்து - கொண்டுவந்து. ஆதரவு-விருப்பம். கேதகை - தாழை.

44. கேள்வன்-கணவன்.

45 மெள்ளரிய தாம மெனக்குதவா யேயுனக்கு
வள்ளலெனு நாமம் வழுவாதோ—தெள்ளுகடன்

46 ஞாலத் துளவமே நல்லிளமை போகாமற்
கோலத் துளவமே கொண்டுதவாய்—சீலத்தா

47 லூனா யுடலா யுறுதுணையாய்த் தெய்வமா
யானா மருந்தாயென் னாருயிரா—யானாத

48 நெஞ்சமாய்க் கண்ணாய் நினைவாய் வினையேற்குத்
தஞ்சமாய் நின்ற தனிமுதலே—பஞ்சவர்க்காய்

49 மெய்த்தூது சென்றவரை வெல்லவே வெண்சங்கம்
வைத்தூது செங்கமல மாயோன்பா—லித்தூது

50 நல்லதெனக் காரே நடந்தருள வேண்டுநீ
யல்லதெனக் காரே யருள்செய்வார்—சொல்லித்

51 தருதுமெனக் கந்தரமே சாற்றாயே லுய்யக்
கருதுமெனக் கந்தரமே கண்டாய்—பெரிது

52 மெனைத்தோன்றி யோதுயர மெய்தினார் பார்மே
லுனைத்தோன்றி யோதூ துழன்றார்—நினைத்தார்

53 தமது பிறப்பறுக்குந் தாயாகி மேனா
ளமுதிற் பிறந்தாள்பா லன்றோ—நமது

54 கருமஞ் சனையவற்காய்க் காய்கதிரைப் பாய்ந்து
பொருமஞ் சனைசிறுவன் போனான்—றரணிதனின்

---

45. தாமம்—மாலை.

46. ஞாலம்-உலகம். அவம்-வீண். கோலம்-அழகு. துளவம்-திருத்துழாய். உதவுதல்-கொடுத்தல். சீலம்-தூய்மை.

48. தஞ்சம்—புகலிடம்.

50. நல்லதெனக் காரே எனவும், அல்லது எனக்கு ஆரே எனவும் பிரிக்க.

51. கந்தரமே! "சொல்லித் தருதும்" எனச் சாற்றாயேல் உய்யக்கருதும் எனக்கு அந்தரமே எனக் கூட்டுக. கந்தரம்—மேகம். தருதும்—தனித்தன்மைப்பன்மை. அந்தரம்-முடிவு.

52. முதல் 57 வரையுள்ள கண்ணிகளால், தலைவி மேகத்தை நோக்கித் தூதுசெல்லுதல் இழிவாகக்கருதப்படாது தொன்றுதொட்டு உயர்வாக மதிக்கப்பட்டதென்று சரித்திர ஆதாரங்கொண்டு விளக்கி அதைத் திருநறையூர்நம்பியிடம் தூது சென்றுவரும்படி வேண்டுகிறாள்.

53. அமுதிற்பிறந்தாள் என்பது இங்கு சீதையையுணர்த்திற்று.

54. கருமஞ்சு அனையவன்—கரிய மேகம்போலு மிராமன். காய்கதிர்-சூரியன். அஞ்சனை சிறுவன் - அனுமன். தரணி-பூமி.

55 மீது பரவை விடமுண் டவனன்றே
மாது பரவை மணவன்தா-னுதலா

56 லோது மிவரி னுயர்ந்தோ ரிலையன்றே
தூதுபுரிந் தோரைத் தொகுத்துரைத்தேன்-ஆதலாற்

57 றேனின் புறத்தூது தெய்வத் துளவினன்பால்
யானின் புறத்தூ தெழுந்தருளாய்-வானிற்

58 றிவலை பிலிற்றிவருந் தெய்வமே நீயென்
கவலையறத் தூதுபோங் காலைக்-குவலயத்தி

59 லெம்பிரா னூரு மவர்பெயரு மேற்பமின்ற
தம்பிரான் செய்தமையுஞ் சாற்றக்கேள்-உம்பரிற்

60 பன்னிருவர் மான்றேர்ப் பரிதிக் கடவுளரு
மன்னிருவர் தெய்வ மருத்துவரு-மொன்னலரைப்

61 பாயும் விடையர் பதினொருவ ருந்திசையிற்
காயுங் கடாயானைக் காவலருந்-தூயகதிர்

62 வெண்ணிலா விட்டு விளங்குங் கலாமதியு
மெண்ணிலாத் தாரகையி னீட்டமுங்-கண்ணி

63 லருடருமா ஞானத் தருந்தவர் நாகர்
தெருடரும் விஞ்சையர் சித்தர்-கருட

64 ராக்க ரியக்க ரவுணர் முதலோர்
பாக்குங் கணங்கள் பலரும்-பெருக்கரு

65 நீரேழு மேழு நினது பெருங்கணமும்
பாரேழு மேழு பருப்பதமு-மீரே

66 ழடுக்கும் புவனமு மாடகமால் வெற்பு
மெடுக்கு மரவரசு மெல்லாந்-தொடுக்கத்தான்

---

55. பரவை-1. கடல், 2. பரவை நாச்சியார்.

57. தேன் இன் புறத்து ஊதி எனவும், யான் இன்புறத் தூது எனவும் பிரித்துப் பொருள்கொள்க.

58. திவலை-துளி. பிலிற்றி-துளித்து. குவலயம்-பூமி.

59. முதல் 133 வரையுள்ள கண்ணிகளால் தலைவி, தான்விரும்பிய தலைவனது ஊரும், பெயரும், சிறப்பும், பிறவும் தலைவரலாறு ஆகியவற்றைக் கூறுகிறாள்.

60. ஒன்னலர்-பகைவர்

62. தாரகை-விண்மீன். ஈட்டம்-கூட்டம்.

63. தெருள்-தெளிவு.

66. ஆடகமால்வெற்பு—மகமேரு அரவரசு-ஆதிசேடன்.

67 முண்டக நாபி முளைக்குஞ் சதுமுகனே
டண்ட வளாக மடங்கலுங்கண்—கண்டளித்து

68 முன்னிய வண்ண முடித்து விளையாடுந்
தன்னிகரில் லாத தனிமுதல்வன்—அன்னமாய்

69 மீனாகி யாமையாய் வெள்ளேன மாய்மடங்கன்
மானாகி மாயையாய் வாமனமாய்—ஆனாத

70 மானிடராய்ப் பாய்பரியாய் வாழு மடியவர்க்குத்
தானிடராற் றப்புகுந்த தம்பிரான்—மேனாளிற்

71 பைங்நாகப் பள்ளிமேற் பங்கயங்கள் பூத்தொளிரு
மைங்நாகம் போற்கண் வளருநாட்—பொன்னாய

72 வன்ன முளரி மலர்த்தவிசில் வீற்றிருக்கு
மன்ன முணர்த்தவுண ராமைபா—லென்னையல்லா

73 லிந்நித் திரைமடந்தை யெய்தலுமா யிற்றேவென்
றுன்னித் திரைமடந்தை யூடினளா—வந்நிலையே

74 காயத்திரியுங் கலைமகள்சா வித்திரியு
மாயத் தெரிவையரா யாங்குவர—நேயத்தார்

75 கோலத்தாள் கைதொழுது கூரிலைய முக்கவட்டுச்
சூலத்தா ளேவற் றொழில்கேட்ப—ஞாலத்து

76 மானிட மங்கை வடிவாக வந்துறையுங்
கானிடம் யாதென்று கண்சாத்தி—யானா

77 நலமாகும் யோசனையோர் நாற்றிசையு முத்தித்
தலமாஞ் சுகந்தவனந் தன்னு—ளலமாற

---

67. முண்டகம்—தாமரை. நாபி—கொப்பூழ். சதுமுகன்-பிரமன்.

69. ஏனம்-பன்றி. மடங்கல்மான்-நரசிங்கம்.

70. இடர்-துன்பம்.

71. நாகப்பள்ளி-பாம்பணை. ஒளிர்தல்-விளங்குதல். மைங்நாகம்-நீலமலை.

72. வன்னம்-நிறம். தவிசு—ஆசனம். உணர்த்த-துயிலெழுப்ப.

73. நித்திரைமடந்தை – நித்திரா தேவி. உன்னி—எண்ணி. திரைமடந்தை-இலக்குமி. ஊடினளாக என்பது ஊடினளா எனக் கடைக்குறையாயிற்று.

74. ஆயத்தெரிவையர்-பாங்கியர்.

75. கோலத் தாள்—அழகிய திருவடி. சூலத்தாள்-துர்க்கை.

76. கண்சாத்தி—பார்த்து.

77. அலம் மாற—பாவம் நீங்க.

78 வான்றிகழுங் கங்கைமுதன் மங்கைமார் மார்கழியிற்
றோன்றியமுற் பக்கத் துவாதசியிற்-றேன்றிகழுங்

79 கூந்த லனையக் குடைந்தாட லானதிக்கு
வேந்தனென நாமம் விளம்பியே-பாய்ந்த

80 திருமணிமுத் தாறலைக்குந் தீரத்தி னின்ற
மருமருவு வஞ்சியின்கீழ் வைக-வருகாக

81 வானமே தாவி வளரு மகிழடியின்
ஞானமே தாவியெனு நன்முனிவன்-றானெய்திச்

82 செய்ய கமலத்துச் செய்யவளைக் கண்டுவந்தே
யையர் பயந்தெடுத்த வன்னையார்-துய்யபெய

83 ரூரே தெனப்பெயரு மூருமிலை தந்தைதாய்
நீரே யெனமுனிவ னெஞ்சுருகிப்-பாரேத்த

84 மன்னிள வஞ்சியின்கீழ் வந்துறைத லாற்பெயரு
மென்னிள வஞ்சியா ரென்றுரைத்துத்-தன்னுழைபி

85 லான வரமுனிவ னவ்வனத்துக் கொண்டிருப்ப
வானவர் தோலா வலிதோற்றுத்-தானவரால்

86 விண்ணா டிழந்து விரிஞ்சனொடு கூப்பிடுகோட்
டண்ணார் துழாய்மா தவனுணர்ந்து-நண்ணார்

87 மிடைகெடுத்து மென்று விடைகொடுத்த பின்னர்க்
கிடைகெடுத்த செந்துவர்வாய்க் கிள்ளை-படைகொடுத்த

88 புண்டரிக மாளிகைமேற் பூவை தணந்தமையு
மண்டரெலா மாற்ற லகன்றமையுங்-கண்டருளிச்

89 செந்திருவை நாடுவான் றெய்வ வடிவகற்றி
யைந்துருவ மாகி யவனிமேல்-வந்தருளி

---

78. முற்பக்கம்-சுக்கிலபக்ஷம்.

80. தீரம்-கரை. மருமருவு-வாசனை பொருந்திய. வஞ்சி-ஒரு மரம். அருகு-பக்கம்.

81. வானமே தாவி-ஆகாயத்தின் கட்பரந்து. மகிழ்-வகுளமரம். மேதாவி-சுகந்தவனத்திலிருந்த ஒருமுனிவன்.

85. தானவர்—அசுரர்.

87. இடை-செக்கெட்டி. துவர்-பவளம். கிள்ளை-கிளி. கிள்ளை, பூவை என்பன இங்கு ஆகுபெயராய் நின்று இலக்குமியை யுணர்த்தின.

88. தணத்தல்-பிரிதல். அண்டர்-தேவர்.

89. தெய்வவடிவு-அப்ராக்ருததிவ்யசரீரம். ஐந்துருவம்-பஞ்சபூதமயமான மானிடசரீரம். அவனி-பூமி.

90 யாடற் பறவை யரச னகல்விசும்பு
தேடத் திசையனைத்துந் தேடியநா—ணீடுஞ்

91 சுகந்தவன நோக்கித் துணையாய செல்வி
யுகந்தவன மீதென் றுணர்ந்து—புகுந்தருள

92 மேதாவி கண்டு விருந்தளிப்ப வெவ்வுயிர்க்கு
மாதாவி னல்லான் மகிழ்ந்ததற்பின்—போதார்

93 முருகுவளை மொய்குழலை முன்றிறனிற் கண்டு
பெருகுவளை முன்கை பிடிப்பத்—திருமகளுங்

94 காதலால் வந்தநம்பி கைப்பிடித்தா னென்றலறிக்
கோதிலா மாமுனியைக் கூவுதலும்—வேதியனுங்

95 கண்புகையச் செய்ய கதிர்புகையக் கார்வெளிற
விண்புகைய வாய்துடிப்ப மெய்பதற—மண்புகைய

96 வந்தான் கரகநீர் வாங்கிச் சபிப்பதற்கு
முந்தாமுன் சங்காழி முன்காட்டச்—சிந்தை

97 மயங்கினு னஞ்சினுன் வாய்குழறிப் பார்மேன்
முயங்கினுன் செங்கை முகிழ்த்தான்—றியங்கி

98 யழுதான் றுளவின்மா லஞ்சலென வானோர்
விழுதா மரைத்தாளில் வீழ்ந்து—முழுது

99 மறியாமை செய்தே னதுபொறுத்தி யென்ன
வெறியாழி யம்மா னிரங்கிச்—செறிதுழாய்க்

100 கோதை மணம்புணர்ந்த கொண்டலுமப் புண்டரிக
மாதை மணம்புணர்ந்து வைகியபி—னீதி

101 யறந்திறம்பா நேமியா னவ்வனஞ்சேர் கைக்கும்
பிறந்தார்கள் வீடு பெறற்குஞ்—சிறந்தமலர்

---

90. ஆடல்-வலி. பறவையரசன்-கருடன்.

92-93. போது-பூ. முருகு-வாசனை. வளைதல்-சூழ்தல். மொய்குழல்-அடர்ந்த கூந்தல், அது இங்கு அன்மொழித்தொகையாய் இளவஞ்சியாரை யுணர்த்திற்று. முன்றில்-முன்முற்றம்.

96. கரகம்—கமண்டலம்.

97. கைமுகிழ்த்தல்-கைகூப்புதல்.

100. கோதை- ஆண்டாள்.

101. அறந்திறம்பா நேமியான்—திருமால்.

102 மாமாதின் பேரே வழக்குமைக்குங் கேட்டவர
மாமா தவனுக் கருளியபின்—பூமாதைப்

103 பாமாதுள் ளிட்டார் பணிந்துவிடை கொடுபோய்த்
தேமா மலரோன் செவிப்படுப்ப—நாம

104 மறையாள னவ்வனத்து வந்தரசி னீழன்
முறையாய வேள்வி முடித்துப்—பொறையார்ந்த

105 பாதார விந்தம் பணிந்தேத்தப் பாற்கடலிற்
சீதார விந்தத் திருவினொடும்—பூதலத்தோர்

106 பேறுபெற வேபஞ்ச பேர வடிவுகந்து
வீறுபெற மாமுனிக்கும் வீடருளிக்—கூறரிய

107 ஞாலத் தெழுபத்து நான்கு சதுரயுகம்
நீலத் தடவரைபோ னின்றபிரான்—மேலைச்

108 சிகரக் குடகிரியிற் சென்றிழிந்து கீழை
மகரக் கடல்வயிறு மட்டு—மகலிடத்திற்

109 பாரங் கிழித்துப் பாவி மதகிடறி
யாரஞ் சுருட்டி யகிலுருட்டி—நார

110 நுரையெறிந்து வித்துருமக் கொத்துநுடங்கத்
திரையெறிந்து முத்தஞ் சிதறிக்—கரையிற்

111 கொழிக்குங்கா வேரி குதித்தோடப் பாய்ந்து
சுழிக்குங்கா வேரித் துறையா—னெழிற்கருகி

112 யோங்கிப் பகலிருளை யுண்டாக்கி யேசுரும்பைத்
தாங்கிப் புயறடுத்த தண்டலையுந்—தேங்கமலப்

113 பூமிசை யன்னம் பொருந்தி வலம்புரியு
நேமியு மேந்திய நீள்கயமுங்—காம

103. தேம்-தேன். நாமம்-புகழ்.
104. பொறையார்ந்த – எல்லாவற்றையுந் தாங்கிய.
106. பேறு-சதுர்விதபுருஷார்த்தம்.
109. பாரம்—கரை. மதகு—மடை. இடறி-மோதி. ஆரம்-சந்தனம். நாரம்-நீர்.
110. வித்துருமக்கொத்து - பவளக்கொத்து. நுடங்க-அசைய.

111. சிதறி-சிதறப்பட்டு. கொழிக்குங் கா–கொழித்தற்கிடமாகியசோலை. வேரி-தேன்.

112. சுரும்பு—வண்டு.

113. வலம்புரி —ஒருவகைச்சங்கு. நேமி-சக்கரவாகப்பறவை. கயம்-தடாகம். காமர்-அழகு, மன்மதனுமாம்.

114 ருளமகிழ வெண்ணிலா வொண்கதிரைக் கன்னல்
வளமதனை யீன்ற வயலு—மளவின்றித்

115 தன்னையே போலத் தழைப்பத் தாணிக்கோ
ரன்னையே போல வருள்செய்வான்—மன்னு

116 மருநறையூர் வீதி மணிமாடக் கோயிற்
றிருநறையூர் வாழ்வாசு தேவ—னிரணியனைப்

117 பாரி லுரங்கிழித்த பன்னகத்தான் பன்னகத்தான்
வாரிநிகர் வண்ணத்தான் வண்ணத்தா—னிடத்துந்

118 தண்ணளியான் றண்ணளியான் சூழ்ந்தவன சக்கரத்தான்
கண்ணினழ கார்முகத்தான் கார்முகத்தான்—விண்ணுலகி

119 னல்லசுரர்க் கண்ணியா னுறுதுழாய்க் கண்ணியான்
புல்லசுரர்க் குக்கொடியான் புட்கொடியான்—றொல்லிலங்கை

120 வஞ்சனை யங்கறுத்தான் வாய்ந்தவடி வங்கறுத்தான்
கஞ்சனைமுன் கண்சிவந்தான் கண்சிவந்தான்—றுஞ்சுந்

121 திரையான் மலரிந் திரையான் கவிகை
வரையான் செழுந்து வரையான்—றரையான

122 மங்கையான் வேதநிய மங்கையான் சென்னியிலோர்
கங்கையான் சூடியகாற் கங்கையான்—பங்கயக்கை

123 யாரணன் கேசவ னுழியா னச்சுதன்
காரண னெம்பெருமான் காகுத்த—னாரணன்

---

114. கன்னல்—கரும்பு.
115. தாணி—பூமி.
116. மருநறையூர்வீதி — வாசனை பொருந்தியதேன் ஒழுகுகின்ற தெரு.
117. பன்னகத்தான்—1. பலநகங்களையுடையான், 2. பாம்பை (அணையாக) உடையான். வாரி-கடல். வண்ணத்தான்—1. நிறத்தையுடையவன், 2. செழுமையான சங்கத்தையுடையவன்
118. அளி-1. கருணை, 2. வண்டு. வனசம்-தாமரை. கரம்-கை. 1. அழகு ஆர்முகத்தான். 2. கார்முகத்தான்-வில்லையுடையான்.
119. நல்ல சுரர்க்கு அண்ணியான்-நல்லதேவர்களுக்குக் கிட்டுமவன். கண்ணி-தலைச்சூட்டு. புட்கொடி - கருடக்கொடி.
121. திரை-இங்கு, திருப்பாற்கடல். இந்திரை-இலக்குமி. வரைக்கவிகையான் எனக் கூட்டுக. வரை-கோவர்த்தனகிரி. கவிகை-குடை. செழுந்துவரையான்-செழுமையான துவாரபதியையுடையான்.
122. வேதநியமம் கையான்-வேதவிதிகளைவிரும்புமவன் (பிரமன்.) சென்னி, கம் என்பன தலையென்னும் பொருளையுணர்த்திநின்றன. கம் கையான்-தலையைக் கையிலுடையான். (சிவன்)

124 யாதவன் கண்ண னிருடிகே சன்முகுந்தன்
மாதவன் கோவிந்தன் வைகுந்தன்—சீதரன்

125 மாய னனந்தன் மதுசூத னன்றிருமா
லாயன் முராரி யருளாளன்—றூயகழற்

126 றேவாதி தேவன் றிருநா யகத்தேவன்
றாவா விடர்கெடுத்த தம்பிரா—னேவாப்

127 படந்திகழு மாடரவப் பாய்க்கிடந்து மேலா
மிடந்திகழ்வை குந்தத் திருந்து—நடந்து

128 பொறையூ ரடிக்கமலம் பூத்தோய வந்து
நறையூரு னின்றருளு நம்பி—மறையூரு

129 மாயிரம் பேழ்வா யநந்தன் பணாடவிமேன்
மாயிரு ஞால மகிழ்ந்திறைஞ்சச்—சேயிருந்தா

130 ரண்டர் குழாமு மருந்தவ ரீட்டமுந்
தொண்டர் குழாமுந் தொழுதேத்தப்—பண்டைத்

131 திருவாய் மொழியுந் திருமொழியும் வேதாத்
தருவாய் மொழியுந் தழைப்ப—வொருவாத

132 திங்களு நாளுந் திருவிழா நின்றோங்க
மங்கல வெண்சங்கம் வாய்பிளிற—வங்கமர்ந்து

133 நன்பஞ்சேர் நாடகக்கா னம்பிக்கு நாயகித
னின்பஞ்சேர் நாளி லினிதொருநாள்—அன்பமர்ந்து

134 தன்னிசையாற் புள்வேந்தன் சாமவே தம்பாடு
மின்னிசையாற் பள்ளி யெழுந்தருளி—மன்னிச்

---

126. தாவாவிடர்-கெடாததன்பம்.

127. திகழ்தல்-விளங்குதல்.

128. பூ-பூமி. தோய-படிய.

129. பேழ்வாய்-பெரியவாய். அநந்தன்-ஆதிசேடன். பணாடவி-படந்தொகுதி.

131. திருவாய்மொழி - நம்மாழ்வாரருளிச்செய்தது. திருமொழி-திருமங்கையாழ்வார் முதலியவர்க ளருளிச்செயல். வேதா-பிரமன். வாய்மொழி-வேதம்.

132. பிளிற-முழங்க.

134. முதல் 200வரையுள்ள கண்ணிகளால் தலைவி திருநறையூர்நம்பியை உலாவரும்போது கண்டு மையல்கொண்டமை கூறி அம்மையல் தீர அவரிடம் சென்று திருத்துழாய்மாலை வாங்கிவரும்படி மேகத்தை வேண்டுகிறாள்.

135 சிலம்புதிரை மோதுந் திருமணிமுத் தாற்றி
னலம்புதிரு மஞ்சனநீ ராடி—நலம்பரவு

136 சேலை களைந்தணிந்து தெய்வப் பசுந்துளப
மாலை புதிய வகைசூடிக்—கோலந்

137 தயங்குதிரு வாரா தனைகொண்ட பின்ன
ரியங்குகடற் சங்க மிசைப்பப்—பெயர்ந்தோர்

138 திருந்துமணி மண்டபத்துச் சிங்கஞ் சுமந்த
வருந்தவிசி னேறி யருளிப்—பொருந்தியநால்

139 வேதமும் வேதாந்த மெய்த்ததிரு வாய்மொழியு
நாதமுங் கேட்டு நயந்துருகி—யோது

140 மருண வடவரையி னம்பொற் குவட்டிற்
றருண மவுலி தயங்கத்—திருநாம

141 மிட்ட வதனத் தெழுதிய கத்தூரி
வட்ட மதியின் மறுவேய்ப்பக்—கிட்டரிய

142 தேங்குழைக்கீழ்க் கற்பகத்திற் செம்பாம்பு சூழ்ந்ததெனப்
பூங்குழைக்கீழ் வாகு புரிதயங்கப்—பாங்கிற்

143 பதிக்குங் கவுத்துவமு மார்பும் பரிதி
யுதிக்கு மரகதக்குன் றொப்பக்—குதித்தொருநாட்

144 கால்வீழ்ந்த கங்கை விலங்கிக் கடிமார்பின்
மேல்வீழ்ந்த தென்னமுந்நூல் விட்டிலங்கச்—சூல்வீங்கு

145 கொண்டலின்கீழ்த் தோன்றுங் குடதிசையிற் செக்கரென
விண்டிலங்கு பொன்னுடை மெய்யசையத்—தொண்டரெலாம்

146 பற்றிக் கழலவிடாப் பாதார விந்தத்தின்
வெற்றிக் கழலின் வெயிலெறிக்க—மற்றுந்தான

---

135. சிலம்பு திரை — ஒலிக்கின்ற அலை.

139. நாதம்—இசை.

140. அருணம்-கருமைகலந்தசிவப்பு. தருணம்-புதுமை. மௌலி—கிரீடம்.

141. வதனம்—நெற்றி.

142. குழை- 1. தழை, 2. குண்டலம். வாகுபுரி-தோள்வளை.

143. பரிதி—இரவி.

144. கடி-விளக்கம். முந்நூல்-யஜ்ஞோபவீதம். சூல்-கருப்பம்.

145. குடதிசை-மேற்றிசை. செக்கர்-செவ்வானம்.

147 வேண்டும் பலகலனு மேகவடி விற்கேற்பப்
பூண்டு களபம் புயத்தணிந்து—நீண்டகடற்

148 பெண்ணா டியதன் பெரிய திருவடிவைக்
கண்ணாடி மண்டிலத்திற் கண்சாத்தி—வண்ணத்

149 திருமருங்குற் கேற்றதொரு சிற்றுடைவாள் வீக்கி
யிருமருங்கு மைம்படையு மேந்தித்—திருமறுகிற்

150 போதரலு நாற்கடல்சூழ் பூதலத்தும் வானத்து
மாத ரரம்பையர்கள் வந்தீண்டிப்—பாதந்

151 தொழுவார் வளைகலைநாண் சோர்வார் மயலா
யழுவார் முலைபசலை யாவார்—குழுவாகி

152 யம்மாதர் நிற்ப வருவினையேன் கைதொழுதேன்
விம்மா வெதும்பா மெலிவானே—னெம்மானுக்

153 கென்னெஞ்ச மென்கலையு மென்னாணுஞ் சங்குமவன்
றன்னெஞ் சறியத் தனிதோற்றேன்—பின்னுமொரு

154 விண்ணப்ப முண்டென்று மெய்ந்நடுங்கிக் கைகூப்பி
வண்ணத் துகிலொதுக்கி வாய்புதைத்துக்—கண்ணுதலாம்

155 வீரன் சிலையிறுத்த வேந்தே வினைவிளைக்கு
மாரன் சிலையிறுக்க வாராதோ—பாரமலை

156 யன்றெடுத்த கையா லழல்வீ சியதென்றற்
குன்றெடுத்த போது குறையாமோ—நின்றெறிக்குஞ்

157 செய்ய கதிர்மறைத்த சாழி யான்மதியின்
வெய்ய கதிர்மறைக்க வேண்டாவோ—கையமைத்து

---

147. கலன்-ஆபரணம். களபம்-சந்தனக்குழம்பு.

148. கடற்பெண்—இலக்குமி. நாடிய-விரும்பிய..

149. மருங்குல்-இடை. மருங்கு-பக்கம். வீக்கி-கட்டி. மறுகு-வீதி.

150. போதரல்-வரல். ஈண்டி-நெருங்கி.

151. கலை-உடை. மயல்-காமமயக்கம்.

155. பாரமலை-பெரியமலை. அது இங்குக் கோவர்த்தனத்தை யுணர்த்தும்.

156. தென்றற்குன்று - தென்றல் பிறப்பதற்கிடமாகிய பொதியமலை.

158 முன்னநீ வாயடக்கு முந்நீரை யென்பொருட்டா
பின்னநீ வாயடக்கி லேலாதோ—பன்னகத்தின்

159 பூமரமே ழுந்துளைத்த போர்வாளி புன்குயில்வாழ்
மாமரமொன் றுந்துளைக்க மாட்டாதோ—சேமலைந்து

160 மாவாய் பிளந்த மரகதமே வம்புரைப்பார்
நாவாய் பிளந்தா னகையாமோ—பூவாய்த்த

161 தூய குருந்தொசித்த தோளாய் செவிவெதுப்பு
மாயர் குழலொசித்தா லாகாதோ—மாயமாய்க்

162 காதிச் சுழல்காற்றைக் காய்ந்தநீ வாடையாய்
வாதிச் சுழல்காற்றை மாற்றாயோ—மோதிவரும்

163 மண்ணூறு நீங்க வழிகண்ட நீயெனது
கண்ணூறு நீங்கவழி காட்டாயோ—தண்ணார்ந்த

164 தாதிரும் பைந்துழாய் தாராயேற் கண்ணனென
வோதுதிரு நாமமா சுண்ணாதோ—வீதிருக்க

165 நீநெடுமா லானநிலை நின்சே வடிதொழுது
நானெடுமா லாகவோ நம்பியே—மாநிலத்துப்

166 பாவையர்கைச் சங்கம் பறிப்பதற்கு நின்சங்கந்
தீவகமோ நேமித் திருமாலே—மேவத்

167 திருக்கடைக்கண் சாத்தாய் திருவாய் மலரா
யருட்கடலே யென்னு மளவின்—மருக்கமலை

---

158. முந்நீர்-கடல். கையமைத்துக் கடல்வாயடங்கச் செய்தது இராமாவதாரத்தில். இது, “வென்வேற் கௌரியர் தொன்முது கோடி, முழங்கிரும் பௌவ மிரங்கு முன்றுறை, வெல்போர் இராம னருமறைக் கவித்த, பல்வீழா லம்போல, வொலியவிந்தன்றிவ் வழுங்கலூரே” என அகநானூற்றிலும்(செய்-எ௨) “மாயோ னடக்கு, நெடுங்கடல் போலடங்கி நிற்க” “இமைக்குங் கடலேழிலேகாந்தராம, னமைக்குங் கடல் பார்த் தமர்ந்தீர்” எனத் தேவையுலாவிலும் (கண்ணி-கக, ருகஎ,) பயின்றுள்ளது.

159. வாளி-அம்பு. சே-எருது.

162. மாயமாய்ச் சுழல்காற்றைக் காதிக்காய்ந்த நீ எனக் கூட்டுக. உழல் காற்று - உழல்தற் கேதுவாயிருக்கும் (அதாவது வருத்தும்) காற்று.

163. கண்ணூறு— கண்ணிலிருந்து பெருகும் நீர்ப்பெருக்கு .

164. கண்ணன் - திருமால். இது சிலேடையால், கண்ணோட்டமுடையனென்னும் பொருளை யுணர்த்திற்று.

165. நெடுமால்-1. திருமால் ,2 பெரியமயக்கம்.

166. தீவகம்-இணக்குப்பார்வை. (பார்வைமிருகம்.)

168 நாதன் சிறிதே நகைகோட்டி வெண்கோட்டு
மாதங்க மீதே மறைதலாற்—சீதரன்றன்

169 வையம் புதைக்கு மலர்கருதி மாறவே
ளெய்யம்பு தைக்கு மிலக்கானேன்—செய்யதிறப்

170 பீதகவா டைக்கும் பெரிய திருவரைக்கும்
பாதகவா டைக்கும் பரிவானே—னாதலா

171 லந்திக் கமல னணையுங்கோ லென்றிருந்தே
னுந்திக் கமலத் துளமானேன்—கொந்துற்ற

172 கொய்துழாய் மார்பகலங் கூடுங்கொ லோவெனவே
கைதுழாய் மண்சுழித்துக் கைசோர்ந்தே—னெய்தி

173 யயனாலுங் காண வரியான் கரிய
புயனாலுங் காணமால் பூண்டேன்—வயமாரன்

174 றுதை திருப்பவளந் தான்வேட் டிளந்தென்ற
றூதை திருப்பவள மொல்கினேன்—மாதுவரை

175 யாயன் பவனிதொழு தன்றுமுத லின்றளவுந்
தூய நயனந் துயினீங்கி—யாயொறுக்கப்

176 பந்து கழன்மறந்து பாவை கிளிதுறந்து
சந்து பனிநீர் தனைத்தகற்றி—வெந்துயராய்ப்

177 போதக் கலனிழந்து பூவிழந்து நீரிழந்து
காதற் சிறையிருத்தல் கண்டாயே—மாதுளபத்

178 தாரானை வேட்கையெல்லாந் தந்தானை மும்மதமும்
வாரானை யன்றழைக்க வந்தானைக்—காரான

179 மெய்யானை யன்பருக்கு மெய்த்தானைக் கண்கைகால்
செய்யானை வேலையணை செய்தானை—வையமெலாம்

---

168. நகைகோட்டி-சிரித்து. கோடு-கொம்பு. மாதங்கம்-யானை.

169 வையம் புதைக்குமலர் - உலகினை யுள்ளடக்கின தாமரைமலர்போலுந் திருவடி. கருதி-நினைத்து.

170. பீதக ஆடை—பொன்னாடை. பாதகவாடை-கொடிய வாடைக்காற்று.

171. அந்தி-மாலைக்காலம். அமலன்-மலமற்றவன். உளம்-மனது. கொந்து-பூங்கொத்து.

172. மண்சுழித்தல்-கூடவிழைத்தல்.

174. திருப்பவளம்-அழகிய பவளம் போலும்அதரம். ஒல்குதல்-சுருங்குதல்.

175. யாய்-தாய். ஒறுத்தல்-தண்டித்தல்.

178. வார்தல்—ஒழுகுதல்.

180 பெற்றானைக் காணப் பெறுதானைக் கன்மழையிற்
கற்றானைக் காத்ததொரு கல்லானை—யற்றார்க்கு

181 வாய்ந்தானைச் செம்பவள வாயானை மாமடியப்
பாய்ந்தானை யாடரவப் பாயானைப்—பூந்துவரை

182 மாமாலைக் கண்டந்தி மாலைவரு முன்னமே
தேமாலை வாங்கநீ செல்லுங்காற்—பூமாயன்

183 முன்னந் தடுத்த முளரித் திருக்கரத்தா
லின்னந் தடுக்குமென வெண்ணாதே—நின்னுடைய

184 தீமுழக்கின் மிக்கதெனச் செங்கண்மால் கைச்சங்கின்
வாய்முழக்கங் கேட்டு மயங்காதே—நீமருவும்

185 வானச் சிலையின் வனப்புளதென் றெம்பெருமான்
கூனற் சிலைகண்டு கூசாதே—மேனிலத்து

186 மின்சோதி யெல்லாம் விழுங்குமென்று நாந்தகத்தின்
நன்சோதி கண்டுமிக நாணாதே—நின்சோதி

187 மையழகி னீல மணியழகி லெம்மான்றன்
மெய்யழகு நன்றென்று வெள்காதே—துய்யமணி

188 யாரக் கபாட மணிக்கோயில் வாசலெலாஞ்
சேரக் கடந்து திருமுன்போய்த்—தூரத்தில்

189 நின்று வணங்கி நெடிதேத்தி வாய்புதைத்துச்
சென்று பெருமான் றிருச்செவியிற்—றுன்றுகடற்

190 றையற் கரசேயுன் றூர்வேட் டொருபேதை
மையற் கரைசேரு மாறறியாள்—மெய்யுருகிக்

191 கொம்பனையா ளோர்விரகங் கொண்டா ளதுதன்னை
யெம்பெருமான் கேட்டருளா யேதென்னி—லம்பாமு

192 மட்புலனு முண்டுமிழ்ந்த மாயோ னுருவமலாற்
கட்புலனும் வேற்றுருவங் காணற்க—புட்புறத்து

---

180. கற்றான்-கன்றோடுகூடிய பசு. இது, சாதியொருமை. கல்லான்—கோவர்த்தனத்தைக்குடையாகவுடையான்.
183. முளரி-தாமரை.
185. வனப்பு—அழகு.
186. நாந்தகம்-வாள்.
188. கபாடம்—கதவு.

193 மூர்த்தி புகழே முகப்பதல்லான் மற்றொருவர்
கீர்த்தி செவிமடுத்துக் கேளற்க—நீர்த்தரங்கப்

194 பூவெடுத்த வெண்கோட்டுப் புண்ணியனை யல்லாதென்
னாவெடுத்து வேறு நவிலற்க—கோவெடுத்த

195 கங்கை யுலவுங் கழலிணைற் கல்லாதென்
செங்கை தலைமிசைபோய்ச் சேரற்க—பங்கயத்தா

196 டாக்குர் திருத்துழாய்த் தாமமண மல்லாதென்
மூக்கும் பிறிதுமண மோவற்க—மாக்கடல்போ

197 லஞ்சன வண்ண னடிக்கமல மல்லாதெ
னெஞ்சமு மொன்றை நினைபற்க—செஞ்சுணங்கோ

198 டிங்கெழுந்த கொங்கை பெழுபிறப்பு மெம்பெருமான்
கொங்கணைந்த தோளல்லாற் கூடற்க—மங்கைநல்லீ

199 ரென்று வருந்தி யிருந்தா ளவளுக்குன்
மன்றல் கமழ்தார் வழங்கென்று—நின்றிரந்து

200 பண்டுளவத் தாமரையாள் பற்றுந் திருமார்பின்
வண்டுளவத் தார்வாங்கி வா.



செங்கமல வயல்சேருந் திருநறையூர் வாழியே
சீராரு நம்பியிணைத் திருவடிகள் வாழியே
பங்கமறு மேதாவி பயந்தசெல்வி வாழியே
பாரின்மறை தென்சொல்லாற் பகுத்துரைப்போன் வாழியே
யெங்களெதி ராச னிணைமலர்த்தாள் வாழியே
யிடில்வர வரமுனிவ னெப்பொழுதும் வாழியே
செங்கருவித் தன்போடு சேவிப்போர் வாழியே
செப்புவோர் வாழிசெவி சேர்ப்போரும் வாழியே.

---

193. தரங்கம்—அலை.
197. சுணங்கு—தேமல்.
198. கொங்கு, 199. மன்றல்—நறும்மணம்.

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1920 ௵ ஆகஸ்டு௴ த்திய வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு 1920 August | | | 1919 August | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) நன்கொடை, மாதச்சந்தா வகையில் வரவு ... | 4199 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 26 | 6 | ... | | | |
| (3) Miscellaneous வரவு ... | ... | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 4225 | 14 | ... | 479 | ... | 1 |
| II Editorial Section: | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தா வரவு ... | 17 | ... | ... | | | |

| விவரம் | செலவு 1920 August | | | 1919 August | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) Establishment:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் | 106 | 15 | 6 | | | |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 95 | ... | ... | | | |
| (c) மாணவர்கட்குப் போஷணைக்காகச் செல் ... | 22 | 6 | 10 | | | |
| (d) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 45 | ... | ... | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையில் செல் ... | 69 | 11 | 6 | | | |
| (3) Furniture வாங்கியவகையிற் செல் ... | 45 | 10 | 6 | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) 'செந்தமிழ்ப் பத்திரிகைக்குச் சந்தா வரவு ... | 20 | 4 | ... | | | |
| (3) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு ... | 14 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 51 | 4 | ... | 108 | 2 | ... |
| III Press Section: | | | | | | |
| (a) Printing | | | | | | |
| (1) சங்கம்பவர்ப்பிரஸ்ஸில் நடந்தவேலைகளுக்கு அச்சுக்கூலி வரவு ... | 144 | 4 | ... | | | |
| (2) ஷை வேலைக்காக காகிதக் கிரயம் வரவு ... | 9 | 6 | ... | | | |
| (3) பிரஸ் குத்தகைதாரிடமிருந்து சங்கத்திற்கு வரவேண்டிய குத்தகைப் பணம் மீதி வரவு ... | 566 | 10 | 8 | | | |
| (4) ஷையாரிடமிருந்து ஆர்டர்தாருக்கு வாபஸ்செய்யும்படிவந்த தொகைவரவு | 100 | ... | ... | | | |
| (5) ஷையாரிடமிருந்து காகிதக் கிரயம் வரவு ... | 18 | ... | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (4) சங்கக்கட்டட வகையரா ரிப்பேர் சம்பந்தமாகச் செலவு ... | 755 | 11 | 7 | | | |
| (5) தபால்,தந்தி வகையில் செல் ... | 26 | 10 | 3 | | | |
| (6) புத்தகப்பிரசுர சம்பந்தமாகக் காகிதம், அச்சுக்கூலி வகையிற்செலவு ... | 36 | 4 | ... | | | |
| (7) சங்க சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி வகையில் செலவு ... | 22 | ... | ... | | | |
| (8) Miscellaneous செலவு | 18 | 13 | 4 | | | |
| மொத்தம் ரூ ... | 1244 | 3 | 6 | 475 | 9 | 9 |
| II Editorial Section: | | | | | | |
| (1) செந்தமிழ்ப் பத்திரிகை சம்பந்தமாகக் காகிதம் அச்சுக்கூலி வகையில் செலவு ... | 242 | 4 | 6 | | | |
| (2) தந்தி, தபால் வகையில் செலவு ... | 18 | 14 | 9 | | | |
| மொத்தம் ரூ ... | 261 | 3 | 3 | 26 | 4 | ... |
| III Press Section: | | | | | | |
| (a) Printing | | | | | | |
| (1) Furniture வாங்கிய வகையில் செலவு ... | 31 | 7 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (B) Binding | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீஸில் நடந்த வேலைகளுக்கு, பைண்டிங் சார்ஜ் வரவு ... | 33 | 4 | ... | | | |
| (2) Miscellaneous வரவு ... | 1 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 872 | 8 | 8 | 461 | ... | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) அச்சாபீஸ் சீர்திருத்தசம்பந்தமாகச் செலவு ... | 22 | ... | ... | | | |
| (3) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 52 | 4 | 5 | | | |
| (4) பிரஸ் குத்தகைதாருக்கு டெபாஸிட்டுத் தொகையில் வாபஸ் செய்தது ... | 479 | 1 | 8 | | | |
| (5 Special staffக்கு சம்பளம் செல்லாக்கிய வகையில் ... | 33 | 9 | 4 | | | |
| (6) Miscellaneous செலவு | 69 | 2 | ... | | | |
| (b) Binding | | | | | | |
| (1) Furniture வாங்கிய வகையில் செலவு ... | 2 | 10 | .. | | | |
| (2) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 33 | 11 | 6 | | | |
| மொத்தம் ரூ | 723 | 13 | 11 | 477 | 2 | 8 |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 5149 | 10 | 8 | 1048 | 2 | 1 | ஆகமொத்தம் செலவு ரூ. | 2229 | 4 | 8 | 979 | ... | 5 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத் தொகை ரூ. ... | 176 | 10 | 11 | 1167 | 14 | ... | மாத முடிவில் மீதியிருப்புத் தொகை ... | *3097 | ... | 11 | 1236 | 15 | 8 |
| ஆகமொத்தம் ரூ. ... | 5326 | 5 | 7 | 2216 | ... | 1 | ஆகமொத்தம் ரூ. ... | 5326 | 5 | 7 | 2216 | ... | 1 |
| | | | | | | | *By C. Pass Book 550-0-0<br>Advance for purchase of Press Materials at Madras 1800-0—0<br>Cash on hand 747-0-11 | | | | | | |

*Audited and found correct.*

**V. S. RAMASWAMI,**

AUDITOR.

1—11—20.

**T. SUDARSANACHARI,**

*Joint Secretary,*

MADURA TAMIL SANGAM.

3—9—20.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1920-௵ செப்டம்பர்௴ த்திய வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1920 September | | | 1919 September | | |
|---|---|---|---|---|---|---|
| **I General Section:** | | | | | | |
| (1) நன்கொடை, மாதச்சந்தா வகையில் வரவு ... | 2032 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு. | 40 | 15 | ... | | | |
| (3) Miscellaneous வரவு ... | ... | 8 | ... | | | |
| மொத்தம் ... | 2073 | 7 | ... | 359 | 14 | 2 |
| **II Editorial Section:** | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தா வரவு ... | 11 | ... | .. | | | |

| விவரம் | செலவு 1920 September | | | 1919 September | | |
|---|---|---|---|---|---|---|
| **I General Section:** | | | | | | |
| (1) Establishment:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டு ஆபீஸ்சிப்பந்திகட்குச் சம்பளம் செல்... | 136 | ... | ... | | | |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச்சம்பளம் செல் ... | 107 | ... | ... | | | |
| (c) மாணவர்கட்குப் போஷணைக்காகச் செல் ... | 96 | 2 | ... | | | |
| (d) Literary Section சிப்பந்திகட்குச்சம்பளம் செல் ... | 57 | 4 | 2 | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையிற்செல் ... | 53 | 15 | 6 | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகைக்குச் சந்தாவரவு ... | 12 | 3 | ... | | | |
| (3) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு ... | 18 | 3 | ... | | | |
| மொத்தம் ... | 41 | 6 | ... | 118 | 11 | 10 |
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்ஸில் நடந்த வேலைகளுக்கு அச்சுக் கூலி வரவு ... | 143 | 14 | ... | | | |
| (2) ஷை வேலைகட்காகக் காகிதக்கிரயம் வரவு ... | 5 | 5 | ... | | | |
| (3) Miscellaneous வரவு... | 7 | ... | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| சங்கம் பைண்டிங் ஆபீசில் நடந்த வேலைகளுக்கு பைண்டிங் சார்ஜ் வரவு... | 114 | 5 | ... | | | |
| மொத்தம் ... | 270 | 8 | ... | 972 | 15 | 9 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) Furniture வாங்கிய வகையிற்செல் (புத்தகசாலைக்கு) ... | 6 | ... | ... | | | |
| (4) ஆபீஸ் உபயோகத்திற்கு Furniture வாங்கியவகையிற் செல் ... | 28 | 14 | ... | | | |
| (5) சவுக்கட்டட ரிப்பேர் வகையில் செலவு ... | 22 | 11 | ... | | | |
| (6) தபால், தந்திவகையில் செல் ... | 22 | 9 | 9 | | | |
| (7) புத்தகப்பிரசுர சம்பந்தமாகக் காகிதம் அச்சுக் கூலி வகையில்செலவு ... | 75 | 12 | ... | | | |
| (8) சங்க சில்லரை வேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி வகையிற் செலவு ... | 4 | ... | ... | | | |
| (9) சங்கப் பரீக்ஷையில் பரிசு பெற்றவர்கட்குப் பரிசுத்தொகையளித்த வகையிற் செலவு ... | 105 | ... | ... | | | |
| (10) சங்க வருஷோத்ஸவ சம்பந்தமாகச் செலவு ... | 318 | 3 | 5 | | | |
| (11) Miscellaneous செலவு | 1 | 10 | 0 | | | |
| மொத்தம் ... | 1035 | 1 | 10 | 470 | 12 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சிப்பதிகட்குச்சம்பளம் செல் ... | 6 | 3 | 5 | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பத்திரிகைசம்பந்தமாக, காகிதம்அச்சுக்கூலி வகையிற் செல் ... | 163 | 10 | 6 | | | |
| (3) தபால், தந்தி வகையில் செல் ... | 11 | 11 | 3 | | | |
| (4) முனிசிபாலிட்டிக்கு வரிசெல்லாக்கியது ... | 4 | ... | ... | | | |
| மொத்தம் ... | 185 | 9 | 2 | 33 | 7 | ... |
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 142 | 9 | 6 | | | |
| (2) அச்சாபீசிற்கு டைப்ஸ் வகையரா வாங்கியது. ... | 787 | 11 | 6 | | | |
| (3) ஷை ஆபீசிற்கு Furniture வாங்கியது ... | 597 | 15 | 6 | | | |
| (4) அச்சாபீஸ் சீர்திருத்த சம்பந்தமாகச் செலவு ... | 272 | 4 | 6 | | | |
| (5) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 164 | 15 | 3 | | | |
| (6) Miscellaneous செலவு. | 44 | 6 | ... | | | |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | (b) Binding: | | | | | | |
| | | | | | | | (1) சிப்பந்திகட்குச் சம்பள செல் ... | 24 | 12 | 1 | | | |
| | | | | | | | (2) மெஷின் ரிப்பேர் வகையிற் செலவு ... | 17 | ... | ... | | | |
| | | | | | | | (3) Contingencies வாங்கிய வகையிற்செலவு ... | 79 | 13 | ... | | | |
| | | | | | | | மொத்தம் ... | 2131 | 7 | 4 | 861 | 8 | 2 |
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 2385 | 5 | ... | 1451 | 9 | 9 | ஆக மொத்தம் செலவு ரூ ... | 335 2 | 2 | 4 | 865 | 11 | 2 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ... | 3097 | ... | 11 | 1236 | 15 | 8 | மாதமுடிவில் மீதி இருப்புத் தொகை ... | *2130 | 3 | 7 | 1822 | 14 | 3 |
| ஆகமொத்தம் ரூ ... | 5482 | 5 | 11 | 2688 | 9 | 5 | ஆகமொத்தம் ரூ. ... | 5482 | 5 | 11 | 2688 | 9 | 5 |

*By C Pass Book 15—0—0
Advance for purchase of Press Materials at Madras 212–11—0
Cash on hand 1902—8—7

*Audited and found correct,*

**V. S. RAMASWAMI,**

AUDITOR,
1—11—20.

**T. SUDARSANACHARI,**

*Joint Secretary,*

MADURA TAMIL SANGAM.
8—10—20.

# தமிழ்ப் புத்தகங்கள்.



**சீவகசிந்தாமணிவசனம்.**—இஃது பெரும்பஞ்சகாவியங்களுள் முதலாவதான சீவகசிந்தாமணியின் முதலிரண்டு இலம்பகங்களின் செய்யுட்களைத் தழுவி இனிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. ரூ. 1—4—0

**உதயணன்.**—இது சிறுபஞ்சகாவியங்களிலொன்றாய்ச் செய்யுள் ரூபமாக இருந்த உதயணகுமாரகாவியத்தைத்தழுவி எழுதப்பட்டுள்ளது. 0—8—0

**ஸ்ரீபாலன்.**—இஃது ஸ்ரீபுராணத்தினின்றும் எடுத்தெழுதப்பட்ட ஓர் சிறந்த கதை. இதை வாசித்தாற் பல அரிய நீதிகளையெல்லாம் நன்கறியலாம். 0—10—0

**மேருமந்தரபுராணம் உரையுடன்.**—இந்நூல் இதுவரையில் அச்சில் வாராதது. ஜைனமத தத்துவங்களைச் சகலரும் அறிந்துகொள்வதற்கு இதுவே இன்றியமையாத நூலென்பது உலகறிந்தவிஷயம்.

| | |
|---|---|
| ஷை முதற் சருக்கம். | 0—6—0 |
| இரண்டாவது சருக்கம். | 0—5—0 |
| மூன்றாவது சருக்கம். | 0—8—0 |

**ஜிநேந்திரஞானத் திருப்புகழ்.**—ஸ்ரீ அருகபரமனைத் துதிக்கும் பாட்டுகள் நூறு கொண்டது. இதற்கு இராக தாளங்கள் அமைக்கப்பட்டுள்ளன. 0—8—0

**சூளாமணிகாவியம்.**—இக்காவியம் சொற்பொலிவு பொருள்நயம் நடையழகு கற்பனையலங்காரம் முதலியவற்றாற் சிறந்துவிளங்கும் 2131 செய்யுட்களைக்கொண்டது. 2—8—0

**சீவகசிந்தாமணி.**—நச்சினார்க்கினியருரை; பலவகை ஆராய்ச்சிக்குறிப்புக்களுடன். (இரண்டாம் பதிப்பு) 7—8—0

**சிலப்பதிகாரம்.**—அரும்பதவுரையும், அடியார்க்குநல்லாருரை முதலியனவும். (இரண்டாம் பதிப்பு) 8—12—0

**இலக்கணவிளக்கம் மூலமும் உரையும்.**—திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இயற்றியது. ஸ்ரீமத். சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது. 6—0—0

**பத்துப்பாட்டு** மூலமும் நச்சினார்க்கினியருரை முதலியனவும்; பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன். (இரண்டாம் பதிப்பு.)